ஸகி2யான க்ஷாந்தியின் ப்ரபா4வமிருப்பது. இப்படி ப4க3வத் காருண்ய க்ஷாந்திகளிலும் அதிஶயிதமான பிராட்டியினுடைய கருணாஸகி2யான [a] ஆகஸ்மிக க்ஷாந்தியை 177. (ஸாந்த்3ரமஹாக3ஸ: — நஸ் ஸஹ2யது) என்று ப4ட்டர் ப்ரார்த்தி2த்தருளினரிறே. இன்னமும் 178. (க்ருபயா பர்ய பாலயத்) என்று [b] ப3லிபு4க்கான காகத்தை ரக்ஷித்த க்ருபைக்கும் அடி 104. (த்ராஹி த்ராஹீதி ப4ர்த்தாரமுவாச த3யயா விபு4ம்) என்னும் உன் த3யையிறே. (த3யாம்) 179. (ஸ்வார்த்த2நிரபேக்ஷா பரது3:க்க2ாஸஹிஷ்ணுதா—த3யா) என்கிற லக்ஷணலக்ஷிதையான க்ருபை 180. (மர்ஷயாமீஹ து3ர்ப்ப3லா) என்ற உன் பக்கலிலே அனுஷ்ட2ானஶேஷமா யன்றோ இருப்பது.

(வித3ங்) இப்படி ஸமாப்4யதி4க்ரஹிதையாய், ஸர்வ லோகப்ரஸித்3தை4யாய், த்வத்3த3யைகத4ாரகனாய் த3யனீய னான என்னை விஷயீகரித்த உன் த3யாப்ரபா4வத்தை அறியாநின்றுகொண்டு. "தா3ந்தே புருஷே தே த3யாம் வித3ங்" என்று ஸாமாந்யமாக யோஜிக்கவுமாம். அப்போதும் அந்த ந்யாயம் தமக்கு ஒக்குமிறே. இப்படி ஸாமாந் யேந வரும் அந்வயத்திலும் விஶேஷாந்வயத்துக்கு விஶேஷப்ரயோஜனமுண்டு. 'தா3ந்த' ஶப்3த3ம் ப்ரஶ்ரித மாத்ரபரமாகவுமாம். 181. (த4ர்மநித்யே மஹாபு3த்3தெ4ள ப்3ரஹ்மண்யே ஸத்யவாதி3நி। ப்ரஶ்ரிதே தா3நஶீலே ச ஸதை3வ நிவஸாம்யஹம் ॥) என்று ப்ரஶ்ரிதனிடத்திலும் தனக்குண்டான விஶேஷாபி4மானத்தை ஸ்வயமேவ அருளிச்செய்தாளிறே.

[லோகைகேஶ்வரி! லோகநாத2த3யிதே! யஸ்யாஸ்தே நிரவதி4ம் ஸ்வதோ நித்யானுகூலம் மஹிமாநம் ப்ரபு4ஸ்த்வத்3 வல்லபே4ாऽபி ஆத்மந இவ இயத்தயா மாதும் நாலம், தாம் த்வாமஹம் தா3ஸ இதி ப்ரபந்ந இதி ச தா3ந்தே மயி தே த3யாம் வித3ங் நிர்ப்ப4ய: ஸ்தோஷ்யாமீத்யந்வய:]

[a] ஶ்ரீகு3ண.50. [b] ர-ஸ்த 2-97.



3. ஈஷத் த்வத்கருணாநிரீக்ஷண
ஸுதா4ஸந்து4க்ஷணாத் ரக்ஷ்யதே
நஷ்டம் ப்ராக் தத3லாப4தஸ்
த்ரிபு4வநம் ஸம்ப்ரத்யநந்தோத3யம் ।
ஶ்ரேயோ ந ஹ்யரவிந்த3லோசநமந:-
காந்தாப்ரஸாத3ாத்3ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்4வஸு
ந்ருணாம் ஸம்பா4வ்யதே கர்ஹிசித் ॥

3. பதவுரை:— தத் அலாப4த:— அந்தக் கடாக்ஷம் இல்லாமையாலே, ப்ராக் நஷ்டம்—முன் நசித்துக்கிடந்த தான, த்ரிபு4வநம் — மூவுலகமும், ஸம்ப்ரதி — இப்போது, ஈஷத் — சிறிதளவு, த்வத் கருணா நிரீக்ஷண ஸுதா4 ஸந்து4க்ஷணாத் — உன்னுடைய கருணாகடாக்ஷமாகிற அம்ருதவர்ஷத்தினால், அநந்தோத3யம் — அளவற்ற பெருமையை உடைத்தாகும்படி, ரக்ஷ்யதே — காப்பாற்றப்படுகிறது; ந்ருணாம் — மனிதர்களுக்கு, ஸம்ஸ்ருதி அக்ஷர வைஷ்ணவாத்4வஸு—ஐஶ்வர்யம், கைவல்யம், பரமபத3ம் இவைகளில், ஶ்ரேய:—மேன்மையானது, அரவிந்த3 லோசந மந: காந்தா ப்ரஸாத3ாத் ருதே — தாமரைக்கண்ணனின் மனத்துக்கினியவளான ஸ்ரீ தே3வியின் அருளில்லாமல், ந ஹி ஸம்பா4வ்யதே—ஏற்படாதன்றோ.

3. அவ:— ப்ரத2மஶ்லோகத்தாலே — பெரியபிராட்டியாருடைய ஸர்வோத்கர்ஷப்ரகாஶகமான பரத்வத்தை அநுஸந்தி4த்து, [a]"அம்மான் ஆழிப்பிரான்" என்றாப்போலே ஸர்வோத்க்ருஷ்ட விஷயத்தை ஸர்வாபக்ருஷ்டனான நான் ஸ்தோத்ரம் பண்ணுகையாவதென்? என்று பீ4தராய், "த்வாம் வயம் கத2ம் ப்3ரூம:" என்று நிவ்ருத்தரானார். த்3விதீயஶ்லோகத்தாலே, நிவ்ருத்தரான தம்முடைய ஸ்தோத்ரஶ்ரவண கௌதுகத்தாலே ஸ்தோத்ரவிரோதி4கள் நஶித்து ஸ்தோத்ரகரணகாரண ஜ்ஞாநாதி3கள் உண்டாம்

[a] திருவாய் 5-1-7.

படி கடாக்ஷித்து த3யையைப்பண்ண, அத்தையறிந்து ஸம்ப3ந்த4ஜ்ஞாநபூர்வகமாக ஶரணம் புகுந்து, கீழ் ஸ்தோத்ராரம்ப4ாக்ஷேபஹேதுவாகச் சொன்ன ஸ்தோத வ்யக3தோத்கர்ஷத்தைத் முக2ாந்தரேண த்3ருடீ4கரியாநின்று கொண்டு, தது3பஶ்லிஷ்ட ஸௌலப்4யவிஶேஷத்தை அநுஸந்தி4த்து, ஸ்தோத்ருக3தத3யநீயத3ஶாநுரூப ஹேது வாலே ஸ்துத்யாரம்ப4ஸமாத4ாநம் பண்ணினுர். இப்படி ஸ்தோத்ராரம்ப4ாக்ஷேப ஸமாத4ாநவ்யாஜேந பிராட்டியி னுடைய பரத்வ ஸௌலப்4யங்களை அநுஸந்தி4த்து, ஸ்தோத்ரத்திலே உபக்ரமித்து, தத்ஸர்வஸமாஶ்ரயணீயத்வ க்2யாபநார்த்த2மாக ஸகல புருஷார்தத2 ப்ரத3த்வத்தை உத3ாஹரணஸஹிதமாக உபபாதி3க்கிருர் இதில் (ஈஷத் த்வத்) இத்யாதி3யாலே.

" 'த3ாந்தே மயி தே த3யாம் வித3ந் அஹம் நிர்ப்ப4ய: ஸ்தோஷ்யாமி' என்று நாம் உம்மைக் கடாக்ஷித்தோமாக வும், அத்தாலே உம்முடைய அபி4மதம் ஸித்3தி4த்ததாக வும் சொன்னீர்; லோகத்திலே சேதனர்க்கு இஷ்டா நிஷ்டப்ராப்திபரிஹாரங்களுக்கு ஹேதுக்கள் அவ்வவ ருடைய புண்யபாபங்களாயன்ருே இருப்பது. ஆயிருக்க, உம்முடைய அபி4மதம் நம்முடைய கடாக்ஷத்தாலே ஸித்3 தி4த்தது என்னுமிடம் நம்பக்கலிலே ஆத3ராதிஶயத்தாலே சொன்னவித்தனையிறே" என்ன, "நான் ஒரு விஷயத்தில் பக்ஷபாதத்தாலே சொல்லுகிறேனல்லேன்; வஸ்துஸ்தி2 தியை ஆராய்ந்து பார்த்தவிடத்தில், த்ரிக்ஷணாऽவஸ்த2ாயி யாய் நஶித்துப்போகிற புண்யபாபங்கள் மூர்த்தீகரித்திருந்து ப2லப்ரத3மாகிறனவல்லவிறே. **182. (புண்யாபுண்யாவீஶ்வர ப்ரீதிகோபௌ)** என்கிறபடியே a துன்பவின்பவினைகளுக்கு நிர்வாஹகனை ஈஶ்வரனுடைய ப்ரியாऽப்ரியங்கள் அபி4 மதாऽநபி4மதஸித்3தி4களுக்கு ஹேதுக்கள். அவனுடைய கோபப்ரஸாத3ங்களுக்கும் அடி உன்னுடைய கடாக்ஷதத3

a திருவாய் 3-6-8.



ப4ாவங்களாகையாலே, ஸகலசேதனருடைய அநர்த் த2ாப்4யுத3யங்களுக்கு ஹேது, உன்னுடைய கருணு கடாக்ஷலாப4ாலாப4ங்களாயிருக்கும்; ஆனபின்பு, என்னு டைய அபி4மதஸித்3தி4க்கேயன்றிக்கே, ஸகலசேதநர்க்கும் ஐஶ்வர்யாதி3களால் ஶ்ரேயஸ்ஸூ உன்னுடைய ப்ரஸாத3த் தாலல்லது ஸம்ப4வியாதிறே" என்று தத்புருஷார்த்த2ப்ர த3த்வத்தை ஸோத3ாஹரணமாக ப்ரதிபாதி3க்கிருர் (ஈஷத்) இத்யாதி3 ஶ்லோகத்தாலே.

பிராட்டியினுடைய அனுக்3ரஹைகதே3ஶம், அநந்தா-ऽநிஷ்டநிவ்ருத்திக்கும் அநந்தாப்4யுத3யஸித்3தி4க்கும் நித3ான மென்கிற விஶேஷத்3யோதனர்த்த2மாக (ஈஷத்) என்கிருர். **116. (த்வத்ப்ரஸாத3லவம் விநா)** என்றதிறே. த்வச் ச2ப்3த3த்தாலே a ப்ரணிபாதப்ரஸந்நையாய், b க்ஷிப்ரப்ர ஸாதி3னியாம்படியான அஸாத4ாரணஸ்வப4ாவம் ஸூசிப் பிக்கப்படுகிறது. இத்தால் நிக்3ரஹானுக்3ரஹஸ்வப4ாவனை ஈஶ்வரனில் வ்யாவ்ருத்தமான அனுக்3ரஹைகஸ்வப4ாவ த்வம் சொல்லப்பட்டது. **183. (பத்3மே ஸ்தி2தா பத்3மவர்ணு பத்3மநாப4ப்ரியா ஶுப4ா। ஸதா3ाऽநுக்3ரஹஸம்பந்நா ஸா தே3வீ மே ப்ரஸீத3து ||)** என்றும், **184. (அநுக்3ரஹபராம்ருத்3தி4 மநக4ாம் ஹரிவல்லப4ாம்। நமாமி கமலாம் காந்தாம் க்ஷமாம் க்ஷீரோத3ஸம்ப4வாம் ||)** என்றும் அனுக்3ரஹைகஸ்வப4ாவ த்வம் சொல்லப்பட்டதிறே.

(ஈஷத் த்வத்கருணுநிரீக்ஷணஸுத4ாஸந்து4க்ஷணுத்) உன்னுடைய அநிஷ்டநிவர்த்தனேஷ்டப்ராபணுநுகு3ண மான கருணையை ஹேதுவாக உடைத்தான கடாக்ஷ லேஶாம்ருதோத்3ரேகத்தாலே. (கருணுநிரீக்ஷணம்) கருணு ஹேதுகநிரீக்ஷணம். கருணயா விஷயீகரணம், நிரீக்ஷண ஶப்3த3த்தாலே உபசரிக்கிறதாகவுமாம்; கருணுப்ரேரிதமா யிறே நிரீக்ஷணம் உண்டாவது. **185. (காருண்யமாருதா**

a ரா-ஸூ 27-45; 58-89. b ஸ்வாயம்பு4வம் (ப்ரமாணம் 228 காண்க).

நீதை:) என்றதிறே. (நிரீக்ஷண ஸுதா4ஸந்து4க்ஷணுத்) 186. (த்வதீ3க்ஷணஸுதா4ஸிந்து4 வீசிவிக்ஷேபஶீகரை:) என்கிறபடியே கடாக்ஷாம்ருதத்3ருஷ்டிகளாலே என்கை. ஏவம்பூ4தகடாக்ஷம்தான் ஸகலாத்மஸஞ்ஜீவனமாயிருக்கையாலே ஸுதை4யாக ரூபிக்கிருர். ஸுதை4யாலுண்டான ஸம்யகு3ல்லாஸத்தாலே; கடாக்ஷநிக்ஷேபத்தாலே என்கை. (ரக்ஷயதே) உபத்3ரவரஹிதமாக ஸ்தா2பிக்கப்படுகிறது. (ப்ராக்) உன்னுடைய உபேக்ஷாகாலத்திலே. (தத3லாப4த:) உன்னுடைய நிரீக்ஷணுலாப4த்தாலல்லது, உன்னுடைய கோபத்தாலன்றிறே. 176. (க: குப்யேத்3வாநரோத்தம) என்று, சொல்மிறுங்கனுக்கும் உபதே3ஶிக்கிற உனக்குக் கோபமுண்டாக ஸம்பா4வனையில்லையிறே. (நஷ்டம்) a விநஷ்டப்ராயமான. (த்ரிபு4வநம்) இத்தால், த்ரைலோக்யாந்தர்வர்த்தியான ஸகலஜனங்களையும் உபலக்ஷிக்கிறது. "மஞ்சா: க்ரோஶந்தி" இதிவத். (ஸம்ப்ரதி) உன்னுடைய b கடாக்ஷவீக்ஷாக்ஷணலக்ஷ்யமான த3ஶையிலே. (அநந்தோத3யம் யதா2 ப4வதி) பூர்வகாலத்திலும் அதிஶயிதாப்4யுத3யமாம்படி. (ரக்ஷயதே) ப்ராக் தத3லாப4தோ நஷ்டம் த்ரிபு4வநம், ஸம்ப்ரதி ஈஷத் த்வத் கருணுநிரீக்ஷணுத் அநந்தோத3யம் ரக்ஷயதே.

து3ர்வாஸஶ்ஶாபத்தாலே நிஶ்ஶ்ரீகமாம்படி பு4வனத்ரயத்தையும் பரித்யஜித்து, பயோத3தி4யிலே பிராட்டி எழுந்தருளினபோது தத்கடாக்ஷாப4ாவத்தாலே "அஸந்நேவ" என்னும்படி நஷ்டமான த்ரிபு4வநம், பின்பு 187. (க்ஷீரோத3ாச்ச2ரீஸ்ஸமுத்பந்நா ஶ்ரூயதேऽம்ருதமந்த2நே) c "செழுங்கடலமுதினில் பிறந்த அவளும்" என்னும்படி d அமுதில் வரும் பெண்ணமுதாய் அவதரித்து, 188. (தி3வ்யமால்யாம்ப3ரத4ரா ஸ்நாதா பூ4ஷணபூ4ஷிதா। பஶ்யதாம் ஸர்வதே3வாநாம் யயௌ வக்ஷ:ஸ்த2லம் ஹரே:॥) என்கிறபடியே

a வி.பு. 1-9-123. b ஸ்ரீஸ்தவம்-11. c பெரியதிரு 2-7-1.
d பெரியதிரு 6-1-2.



ஸ்நாதையாய், மஹார்ஹவஸநையாய், சித்ரமால்யாநுலேபையாய்க்கொண்டு a திகழ்கின்ற திருமார்பிலே சேர்ந்து b "அகலகில்லேனிறையும்" என்று திருக்கலந்து ஸம்ஶ்லேஷித்தவனந்தரம், உன்னுடைய காருண்ய ஶீதல கடாக்ஷஸுதா4வர்ஷத்தாலே வழிய வார்க்க, அனந்தரம், அத்தாலே ஸத்தைபெற்று, ஸம்ருத்3த4மானபடியை இஶ்லோகத்திலே அருளிச்செய்கிருர். 189. (த்வயா தே3வி பரித்யக்தம் ஸகலம் பு4வநத்ரயம்। விநஷ்டப்ராயமப4வத் த்வயேதா3நீம் ஸமேதி4தம்॥) என்று இவ்வர்த்த2ம் இந்த்3ரனுலே சொல்லப்பட்டதிறே. இப்படி அந்வயவ்யதிரேகங்களாலே ப்3ரஹ்மேந்த்3ரப்ரப்4ருதிசேதனருடைய ஐஶ்வர்யம் பிராட்டியினுடைய கடாக்ஷாதீ4நமென்னுமிடம் த3ர்ஶிப்பிக்கப்பட்டது. 190. (ப்3ரஹ்மாத்3யாஶ்ச ஸுராஸ் ஸர்வே முநயஶ்ச தபோத4நா:। ஏத4ந்தே த்வத்பத3ச்ச2ாயாமாஶ்ரித்ய கமலேஶ்வரி॥) என்னக்கடவதிறே. 191. யஸ்யா: கடாக்ஷணமநுக்ஷணம்) இத்யாதி3.

அத2வா, (ஈஷத் த்வதி3த்யாதி3) 192. ப்ருதி2வ்யப்ஸு ப்ரலீயதே) இத்யாரப்4ய, 192. (தம: பரே தே3வ ஏகீப4வதி), 94. (ந ப்3ரஹ்மா நேஶாந:), 193. (ஆஸீதி3த3ம் தமோபூ4தம் அப்ரஜ்ஞாதமலக்ஷணம்। அப்ரதர்க்யமவிஜ்ஞேயம் ப்ரஸுப்தமிவ ஸர்வத:॥) c "ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா அன்று" இத்யாதி3ப்படியே ஸர்வஸம்ஹாரகாலத்திலே உன்னுடைய கடாக்ஷாம்ருதவ்ருஷ்ட்யலாப4த்தாலே "அஸந்நேவ" என்னும்படி நாமரூபவிபா4க3ாநர்ஹமாய், நஷ்டமான த்ரிபு4வனமானது—193. (அப ஏவ ஸஸர்ஜாதௌ3) 194. (தத்ஸ்ருஷ்ட்வா) என்று சொல்லுகிற ஸ்ருஷ்டிகாலத்திலே, 95. (நாராயணுத்3 ப்3ரஹ்மா ஜாயதே), 195. (ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே), 196. (ஸர்வாணி ரூபாணி விசித்ய தீ4ர:), 197. (அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய நாம

a திருவாய் 10-6-9. b திருவாய் 6-10-10. c திருவாய் 4-10-1.

ரூபே வ்யாகரவாணி) a “நான்முகன் தன்னொடு தேவருலகோடு உயிர் படைத்தான்” b “நாராயணன் படைத்தான்” இத்யாதி3ப்ரமாணப்ரகாரேண அண்ட3ங்களினுடையவும், தத3ந்தர்வர்த்தி தே3வதிர்யங்மனுஷ்யஸ்த2ாவரரூப சதுர்வித4பூ4தங்களுடையவும் ஸ்ருஷ்ட்யுந்முக2னாய்க்கொண்டு, 198. (ததை3க்ஷத ப3ஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி), (தேஜ ஐக்ஷத), (ஆப ஐக்ஷந்த) என்று ஸ்ருஷ்டிக்குக் கடவனாகப்பார்த்தருளினபோது, 199. (யத்3ப்4ரூப4ங்க3ா: ப்ரமாணம் ஸ்தி2ரசரரசநாதாரதம்யே முராரே:) 200. (ஸமஸ்தசித3சித்3வித4ாநவ்யஸநம் ஹரே:, அங்கீ3காரிபி4ராலோகைஸ் ஸார்த்த2யந்த்யை), 201. (உல்லாஸபல்லவிதபாலித ஸப்தலோகீ நிர்வாஹகோரகித நேமகடாக்ஷலீலாம்) 172. (அஶேஷஜக3தாம் ஸர்க்கோ3பஸர்க்க3ஸ்தி2தீ: ஸ்வர்க்க3ம்) என்று தொடங்கி 172. (யஸ்யா வீக்ஷ்ய முக2ம் ததி3ங்கி3த பராதீ4நோ வித4த்தேऽகி2லம்) இத்யாதி3 ப்ரமாணப்ரகாரேண உன்னுடைய ப்4ருகுடிப4டனாய், த்வதி3ங்கி3தபராதீ4னனாய்க்கொண்டு ஸமஸ்தசித3சித்3வித4ானம் பண்ணுகிற அவனுடைய அந்தக் கடாக்ஷானுகு3ணமாகக் கருணாம்ருதகடாக்ஷநிக்ஷேபங்களை நீ பண்ணுகையாலேயன்றோ நாமரூபவிப4ாக3ார்ஹமாய்க் கொண்டு ரக்ஷிக்கப்படுகிறது. (ஈஷத் த்வத்கருணா நிரீக்ஷணஸுதா4 ஸந்து4க்ஷணாத் ஸம்ப்ரத்யநந்தோத3யம் யதா2 பவதி4 ததா2 ரக்ஷ்யதே)

(ப்ராக் தத3லாப4தோ நஷ்டம் த்ரிபு4வநம் ஸம்ப்ரதி ஈஷத் த்வத் கருணா நிரீக்ஷணஸுதா4 ஸந்து4க்ஷணாத் அநந்தோத3யம் ரக்ஷ்யதே) c “எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள்” என்கிறபடியே கடுங்கோடையிலே கமர் பிளந்து உலர்ந்துபோந்த பயிரானது, நினைவற மேக4மேறி வர்ஷித்தால் ஸத்தைபெற்று த4ரித்துப் ப2லபர்யந்தமாமாபோலே d மழைக்கண் மடந்தையான நீ குளிரக்

a திருவாய் 4-10-1. b நான்.திருவ-1. c பெரு-திரு 5-7. d திருவிரு-52.



கடாக்ஷிக்கையாலேயன்றோ முன்பு நஷ்டமான ஜக3த்து, இப்போது மஹீ மஹீத4ர ஜலதி4ரூபமாய், தே3வ திர்யங்மநுஷ்ய ஸ்த2ாவர ரூப சதுர்வித4 தே3ஹப்ரவேஶ சதுரரான ஆத்மாக்களையுடைத்தாய், போ4க்3யபோ4கோ3பகரண போ4க3ஸ்த2ானரூபேண அபி4வ்ருத்3த4மாய்த்து என்று அப்யயபூர்விகையான ஸ்ருஷ்டியில் இவளுக்கு அந்வயம் சொல்லவுமாம். “இப்படி ஜக3த்காரணத்வத்தில் இவளுக்கு அந்வயமுண்டோ?” என்று ப்ரஶ்நம்பண்ணின நடாதூரம்மாளைக்குறித்துப் பிள்ளான் அருளிச்செய்த வார்த்தையை இவ்விடத்திலே அநுஸந்தி4ப்பது. அதாவது: — “இவ்வர்த்த2த்தில் ஸந்தே3ஹமுண்டோ? 202. (ஆவாப்4யாம் கர்மாணி கர்த்தவ்யாநி। ப்ரஜாஶ்சோத்பாத3யிதவ்யா: ।।) என்று ப்ரமாணம் சொல்லுகையாலே ஸஹத4ர்மசாரிணியான இவளுக்கும் அந்வயம் உண்டு” என்று அருளிச்செய்தது.

உக்தார்த்த2 ஸமர்த்த2நவ்யாஜத்தாலே ஸகல புருஷார்த்த2ங்களும் தத்ப்ரஸாத3ாதீ4நமாயிருக்கும் என்கிறார் (ஶ்ரேய) இத்யாதி3யாலே. [அரவிந்த3லோசந மந:காந்தாப்ரஸாத3ாத்3ருதே ந்ருணாம் ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்4வஸு ஶ்ரேயே: கர்ஹிசித் ந ஸம்ப4ாவ்யதே ஹி] (அரவிந்த3லோசந:) 203. (தஸ்ய யதா2 கப்யாஸம் புண்ட3ரீகமேவமக்ஷிணீ) என்று a க3ம்பீ4ராம்ப4ஸ்ஸமுத்3பூ4தமாய், a ஸும்ருஷ்டநாளமாய், a ரவிகரவிகஸிதமுமான a புண்ட3ரீகத3ளம்போலே a அமலாயதேக்ஷணனிறே அவன். ஏதத்துல்யஶீலையான b அஸிதேக்ஷணையிறே இவள். “த்வத்ப்ரஸாத3ாத்3ருதே” என்னவமைந்திருக்க, இவ் விஶேஷணமென்னென்னில்: 204. (ஜிதம் தே) c “தாமரைக்கண்ணனை” என்று உப4யவிபூ4தியையும் எழுத்துவாங்குகிற d அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனையும், வஶீகரிக்கவல்ல வால்லப்4யப்ரஸித்3தி4தோற்ற விஶே

a வேத3ார்த்த2ஸங்க்3ரஹம். b ரா-ஸு 16-5. c திருவாய் 2-6-3.
d திருவாய் 6-7-10.

ஷிக்கிருர். இத்தால் ஸர்வஸ்மாத்பரனுய், ஸ்வதந்த்ரனுன அவனும், இவள் ப்ரஸாத3பாத்ரமானுர்க்கொழியக் கார்யம் செய்யானென்னுமிடமும் தோற்றுகிறது.

"அரவிந்த3லோசநமந:காந்தா" என்கையாலே 205. **(விஷ்ணோ: கடாக்ஷம்)** 206. **(யம் பஶ்யேந்மது4ஸூத3ந:)** என்று சொல்லுகிற அவனுடைய ஸௌஹார்த்த3ப்ரகாஶக மான கடாக்ஷமும் ஏதத3தீ4நம் என்னுமிடம் ஸித்3த4மிறே. (மந:காந்தா) தத3த்யந்தாபி4மதையென்றபடி. கீழ் "காந்தஸ்தே" என்றும், இங்கு "மந:காந்தா" என்றும் சொல்லுகையாலே பரஸ்பரானுகூலதயா ஸர்வாபி4மதப்ரத3த்வத்திலே உப4யர்க்குமுள்ள ஸௌஹ்ருத3ஸாமரஸ்யம் ஸ்பஷ்டமாயிற்று. 206*. **(அஸ்யா தே3வ்யா:)** இத்யாதி3. (ப்ரஸாத3ாத்) த3யாவிஶேஷத்தாலே. (காந்தாப்ரஸாத3ாத்) 207. (**ப்ர ஸாத3பரமௌ**) என்று சொல்லுகிற அவனுடைய ப்ரஸாத3த்துக்கும் அடியான ப்ரஸாத3த்தாலே. a மழைக்கண் மடந்தையாகையாலே அவனுடைய குளிர்ந்த அருளும் வெந்நீர் என்னலாம்படி அதிஶீதளமாயிறே ஶீதளஸ்வப4ாவையான இவள்த3யையிருப்பது. (ருதே) அனுக்3ரஹைகஸ்வப4ாவையான இவளுக்கு ஓரிடத்திலும் நிக்3ரஹம் ஸம்ப4வியாமையாலே, தந்நிவ்ருத்திரூப ப்ரஸாத3ாயோக3த்தால், † 'ஒழிய' என்கை.

(ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்4வஸு) பாரிஶேஷ்ய ப்ரமாணத்தாலும், புருஷார்த்த2 ஸமபி4வ்யாஹாரத்தாலும் 'ஸம்ஸ்ருதி' ஶப்3த3ம ஐஶ்வர்யபரம. 34. **(ஐஶ்வர்யமக்ஷரக3திம் பரமம் பத3ம் வா)** என்று விஶதீ3கரித்தருளினரிறே. ஆனல், ஐஶ்வர்யத்தை ஸம்ஸ்ருதிஶப்3த3த்தாலே அருளிச்செய்வானென்? என்னில்: b "கொள்ளென்று கிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம் நெருப்பாக" என்று

† 'த3யாவிஶேஷரூப ப்ரஸாத3த்தாலொழிய' என்றே வேறுவிதமாகவோ இருக்கவேண்டும். a திருவிரு-52. b திருவாய் 4-9-4.



சொல்லுகிறபடியே ஐஶ்வர்யம் a அல்லலெனத்தோற்றி எரிதீயிற்சுடும்படியான வைராக்3யத்தாலே, b "இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன்" b "பெற்றாலும் ஆதரியேன்", b "வானாளும் செல்வமும் இம்மண்ணரசும் யான் வேண்டேன்" என்று c ஐஹலௌகிகமான ஐஶ்வர்யத்தையும் c பாரலௌகிகமான ஐஶ்வர்யத்தையும் பரித்யஜித்து, 10. **(மா ஶ்'ம பூ4த்)** என்றிருக்கும் ஸ்வாபி4ப்ராயத்தாலும், 208. **(அநர்த்த2ாக்2யம்)** என்னும்படி அநர்த்த2ாவஹமாகையாலும், அல்பாஸ்தி2ரத்வாதி3தோ3ாஷ து3ஷ்டமாகையாலும், 209. **(த4நம் ப்ராப்ய மாத்3யந் உச்சைர் ந மாம் ஸ்மரேத்)** என்கிறபடியே, மத3ஹேதுவாய், ப4க3வத்ஸ்மரணவிரோதி4யாய், இவ்வாகாரங்களினுலே ஸம்ஸாரம் அவத்3யகரமாயிருக்கையாலும் ஸம்ஸ்ருதிஶப்3த3த்தாலே ஐஶ்வர்யத்தை அருளிச்செய்கிருர். அக்ஷரஶப்3த3த்தாலே ஆத்மானுப4வத்தைச் சொல்லுகிறது. வைஷ்ணவாத்4வஶப்3த3த்தாலே 210. **(ஸோऽத்4வந: பாரமாப்நோதி)** என்கிற க3திவிஶேஷத்3வாரா ப4க3வத்ப்ராப்தியை லக்ஷிக்கிறது. இவற்றில், (ஶ்ரேய:) ஶ்ரேஷ்ட2தமஸுக2ம்; தத்ஸாத4ந ஸுக்ருதவிஶேஷமாகவுமாம். 211. **(ஶ்ரேயஸீ / ஸுக்ருதம் வ்ருஷ:)** என்றதிறே.

(ந்ருணும்) அகி2லக்ஷேத்ரஜ்ஞர்க்கெல்லாம் என்றபடி. (ந ஸம்ப4ாவ்யதே) 'ந ஸித்3த்4யதி' என்றபடி. d "திருமாமகள் தன்னருளாலுலகில் தேர் மன்னராய்" என்றும், e "செடியாராக்கை அடியாரைச்சேர்தல் தீர்க்கும் திருமால்" என்றும், f "திருமகளால் அருள்பெற்றுப் பொன்னுலகில் பொலிவர்தாமே" என்றும் அருளிச்செய்தபடியே ஐஶ்வர்ய கைவல்ய ப4க3வல்லாப4 ரூப புருஷார்த்த2ங்களெல்லாம் பெரியபிராட்டியாருடைய ப்ரஸாத3த்தாலல்லது பெற

a ஞானஸாரம்-19. b பெரு-திரு-4. c வ்ருத்3த4ஹாரீத 6-50.
/ (பா) (1) ஸுக்ருதம் விஷய: (2) ஸுக்ருதவிஶேஷ:
d பெரியதிரு 2-9-10. e திருவாய் 1-5-7. f பெரியதிரு 11-6-10.

அரிதாகையாலே, "ஸம்ஸ்ருத்யக்ஷர வைஷ்ணவாத்4வஸு ஶ்ரேய: ப்ரஸாதா3த்3ருதே ந்ருணும் ந ஸம்பா4வ்யதே ஹி" என்கிருர். 212. (பத்3மயோநிரிதா3ம் ப்ராப்ய படா2ந் ஸ்தோத்ரம் தத: பரம்। தி3வ்யம் சாஷ்டகு3ணைஶ்வர்யம் தத்ப்ரஸாதா3ச்ச லப்3த4வாந்॥), 213. (ப்3ரஹ்மாதீ3நாம் யதா3யத்தம் வைப4வம் யஸ்ய ஸா ஸ்வயம்। தஸ்ய கைமுத்யநிர்த்தா4ர்யமீஶ்வரத்வம் ஶ்ரிய:பதே:॥) என்று ப்3ரஹ்மாத்3யைஶ்வர்யத்தோடு, ப்3ரஹ்மஜனகனுன ஈஶ்வரனுடைய ஐஶ்வர்யத்தோடு வாசியற தத்ப்ரஸாதா3தீ4நமாயிருக்கும்படியை ப்ரதிபாதி3த் ததிறே. 214. (ஆ குக்3ராமநியாமகாத்) என்றும், 215. (ஏகோ முக்தாதபத்ரப்ரசலமணிக4ணுத்காரி) என்றும், 34. (ஐஶ்வர்யமக்ஷரக3திம்) என்றும் ப4ட்டரும் இவ்வர்த்த2த்தை ப்ரகடீகரித்தருளினுரிறே.

(ப்ரஸாதா3த்3ருதே ஶ்ரேயோ ந ஸம்பா4வ்யதே) என்கையாலே, அவனுடைய ஸகலப2லப்ரத3த்வமும் ஏதத3தீ4நமென்னுமிடம் தோற்றுகிறது. 172. (அஶேஷஜக3தாம் ஸர்க்கோ3பஸர்க்க3ஸ்தி2தீ: ஸ்வர்க்க3ம் து3ர்க்க3திமாபவர்க்கி3கபத3ம் ஸர்வஞ்ச குர்வந் ஹரி:। யஸ்யா வீக்ஷ்ய முக2ம் ததி3ங்கி3த பராதீ4நோ வித4த்தேऽகி2லம்) என்று ஜக3த்ஸ்ருஷ்ட்யாதி3களும், புருஷார்த்த2 ஸ்ருஷ்டியும் ததி3ங்கி3தபராதீ4னமானுல், புருஷார்த்த2ப்ரத3தவம் தத3தீ4நமென்னச் சொல்லவேண்டாவிறே. 'ஹி' ஶப்3த3ம் ஶ்ரீஸூக்தாதி3 ப்ரஸித்3தி4பரம். இவளுடைய [a]ப்ரப4ாவமும் இந்த்3ராதி3கள் [a]ப்ரப4ாவம்போலே காலபே4த3பே4த்3யமாயிருக்குமோவென்னில், அங்ஙனன்றிக்கே ஏகரூபமாயிருக்குமென்கிருர் (கர்ஹிசித்) என்று; கதா3சித் இத்யர்த்த2:; கர்மாதீ4ந [a]ப்ரப4ாவமாகையாலே, காலபே4த3பே4த்3யமாயிருக்கும் அது; ஸத்யஸங்கல்பாதீ4ந [a]ப்ரப4ாவமாகையாலே இது ஏகரூபமாயிருக்குமென்றபடி.

a (பா) ப்ரஸாத3மும்



நநு, 216. (அம்ருதஸ்யைஷ ஸேது:), 217. (ஸ ப்ரீதோऽலம் ப2லாய), 218.(ப2லமத உபபத்தே:), 219. மோக்ஷமிச்சே2த் ஜநார்த்த3நாத்) இத்யாதி3 ப்ரமாணங்கள் மோக்ஷப்ரத3த்வத்தை முகுந்த3னுக்கே அஸாத4ாரணமாக ப்ரதிபாதி3யாநிற்க, இங்கே பிராட்டிக்கு மோக்ஷோபாயத்வம் சொல்லுகை, ஸ்வேதரஸமஸ்தஸஹாயாநபேக்ஷோபாயத்வத்துக்குச் சேருமோ? என்னில்: "இவள் புருஷகாரமானுலல்லது ஈஶ்வரன் கார்யம் செய்யான்" என்கிற நிஶ்சய நிப3ந்த4னமாகப் பரம்பரயா மோக்ஷப்ரத3த்வம் சொன்ன இத்தால், தந்நிரபேக்ஷோபாயத்வ விரோத4ம் ப்ரஸங்கி3யாதிறே. 220. (உபாயோபேயத்வே ததி3ஹ தவ தத்வம்) என்று உபாயத்வம் ஸ்வதஸ்ஸித்3த4மானுலும், இவள் புருஷீகரியாதவிடத்தில் அது கார்யகரமாகாதிறே. அந்வயவ்யதிரேகங்களாலே தலை பெற்றுரும் தலை அறுப்புண்டாருமாயிறே இருப்பது.

அதில், புருஷகாரஸாபேக்ஷத்வம் உபாயநைரபேக்ஷ்யப4ஞ்ஜகமாகாதோ? என்னில்: ஸ்வீகாரத3ஶையில் ஸ்வீகர்த்தவ்யஸாபேக்ஷமானவோபாதி புருஷகாரஸாபேக்ஷமானுலும், ப2லப்ரதா3நத3ஶையில் ப2லப்ரத3த்வஹேதுவான ஜ்ஞானஶக்த்யாதி3களால் பூர்ணனுகையாலே, உப4யநிரபேக்ஷமாகக் கார்யம செய்ய வல்லனுகையாலே, புருஷகாரஸாபேக்ஷத்வம் உபாயநைரபேக்ஷ்யப4ஞ்ஜகமாகாதிறே. இத்தால் கார்யகாலத்தில் ஸாபேக்ஷத்வம் நிரபேக்ஷத்வப4ஞ்ஜகமாமித்தனையல்லது, வரணகாலத்தில் ஸாபேக்ஷத்வம் நிரபேக்ஷத்வப4ஞ்ஜகமாகாது என்றதாயிற்று. ஆகையிறே [a]"உபாயம் ஸ்வீகாரகாலத்தில் புருஷஸாபேக்ஷமுமாய் புருஷகாரஸாபேக்ஷமுமாயிருக்கும்; கார்யகாலத்தில் உப4ய நிரபேக்ஷமாயிருக்கும்" என்று ஆசார்யாக்3ரேஸரரான பிள்ளைலோகாசார்யரும் அருளிச்செய்தது. 221.(லக்ஷ்ம்யா ஸஹ—ரக்ஷக:) என்கிறவிடத்தில் இவளுக்கும் உபாயாந்வயம் சொல்லிற்றிறேயென்னில்: அங்கும்

a ஶ்ரீவசநபூ4ஷணம் 268.

அப்ரதா4நார்த்தே2 த்ருதீயையாகையாலே, அப்ரதா4ன ரக்ஷணமான புருஷகாரபா4வம் சொல்லுகிறது. உபாயவரணப்ரதிபாத3கமான பூர்வவாக்யத்திலே—வாத்ஸல்யாதி3வத், ஜ்ஞான ஶக்த்யாதி3வத், விக்3ரஹவத், இவளையும் உபாயவிஶேஷணமாகச் சொல்லுகையாலே, இவளுக்கும் கு3ணாதி3வத் உபாயத்வம் ஸித்3த4மிறே என்னில்: வாத்ஸல்யாதி3கள் ஆஶ்ரயண ஸௌகர்யாபாத3கங்களாயும், ஜ்ஞானஶக்த்யாதி3கள் ஆஶ்ரிதகார்யாபாத3கங்களாயும், விக்3ரஹம் ஶுபா4ஶ்ரயமாயும் உபயோகி3க்குமவையாகையாலே, இவற்றுக்குத் தத3நுவிதா4யித்வமாத்ரமேயிறே உள்ளது. இப்படியே இவளும் தத3நுவிதா4யியாயிருக்கையாலே புருஷகாரபா4வமே இவளுக்கு நியதமாயிருக்கும் என்றிறே த்3வயத்திலும் நிர்ணயித்தது. கிஞ்ச, கு3ணாதி3களுக்கு உபாயத்வம் உண்டாகிலும், இவளுக்குப் புருஷகாரபா4வம் நியதமாயிருக்கும் என்றிறே ஆசார்யர்கள் நிர்வஹித்தது. ஆகையால் இவளுக்குப் புருஷகாரபா4வமே அங்கீ3கார்யம் என்றதாயிற்று.

லக்ஷ்மீகு3ணாதி3களுக்கு விஶேஷணத்வம் அவிஶிஷ்டமாயிருக்க, கு3ணங்களுக்கு உபாயத்வம் அங்கீ3கரித்துப் பிராட்டிக்குப் புருஷகாரத்வம் அங்கீ3கரிக்கைக்கு ஹேதுவென்னென்னில்: கு3ணங்கள் கார்யோபயோகி3களாகையாலேயும், இவளுக்குக் கார்யோபயோகி3த்வம் இல்லாமையாலும், கு3ணங்களுக்கு உபாயத்வமும், இவளுக்குப் புருஷகாரத்வமும் அங்கீ3கரிக்கத் தட்டில்லை. நநு, பிராட்டிக்கு உபாயத்வம் கொள்ளில் உபாயநைரபேக்ஷ்யம் ஸித்3தி4யாதவோபாதி, கு3ணங்களுக்கு உபாயத்வம் கொள்ளில் தந்நைரபேக்ஷ்யஹானி வாராதோ? என்னில்: கு3ணங்கள் ப்ருத2க்3பு3த்3தி4 ப்ரவர்த்தகமல்லாமையால், கு3ணத்3வாரா கு3ணி கார்யம் செய்கை நைரபேக்ஷ்யப4ஞ்ஜகமன்று. த்3ரவ்யத்வேந பிராட்டிக்கு ப்ருத2க்3பு3த்3தி4 ப்ரவ்ருத்தி யோக்3யதை உண்டாகையாலே, தது3பாயத்வே



உபாயநைரபேக்ஷ்யம் ஜீவியாதிறே. ஆகையிறே—உபாயாநுஷ்டா2ந ப்ரகாஶகமான பூர்வவாக்யத்திலே, *"சித்ரகு3மாநய" என்கிறவிடத்திற்போலே பிராட்டிக்கு உபலக்ஷணத்வமும், உபேயப்ரார்த்த2நா ப்ரகாஶகமான உத்தரவாக்யத்தில் /"த3ண்டி3நமாநய" என்கிறவிடத்திற்போலே பிராட்டிக்கு விஶேஷணத்வமும் நிர்ணயித்து அனுஸந்தி4த்ததும். இரண்டு இடத்திலும் ஶப்3த3ம் ஒத்திருக்கையாலே, ஏகப்ரகாரமாக உப4யத்ர நிர்வாஹம் பண்ண ப்ராப்தமாயிருக்க, ஏகத்ர உபலக்ஷணத்வமும், அந்யத்ர விஶேஷணத்வமும் என்று இப்படி விப4ஜிக்கிறதுக்கு க3மநிகையென்? என்னில்: வாக்யத்3வயத்திலும் விஶேஷ்யப்ரதிபாத்3ய ஶப்3த3ங்கள் ஸமானமாயிருக்கச் செய்தேயும், 222. **(அர்த்தா2த் ப்ரகரணால்லிங்கா3தௌ3சித்யாத3ர்த்த2நிர்ணய:)** என்கிற ந்யாயத்தாலே, பூர்வவாக்யம் உபாயப்ரகரணமாகையாலே வாத்ஸல்யாதி3கு3ணவிஶிஷ்டன் உபாயமென்றும், உபேயப்ரகரணமான உத்தரவாக்யத்தில் ஸர்வஶேஷியான வஸ்துவே உபேயமென்றும் விப4ஜித்து அர்த்த2நிர்ணயம் பண்ணினாப்போலே, விஶேஷணப்ரதிபாத3க ஶப்3த3ங்கள் உப4யத்ர ஸமானமாயிருந்ததேயாகிலும், உபாயப்ரகரணத்தில் ப4க3வது3பாயத்வநைரபேக்ஷ்ய ஸித்3தி4க்காகப் பிராட்டிக்கு உபாயத்வாநங்கீ3காரேண புருஷகாரத்வம் கொள்ளுகை உசிதமாகையாலும், உபேயப்ரகரணத்தில் மிது2நவிஷயகைங்கர்யமே ஸ்வரூபாநுரூபமாகையாலும், பிராட்டிக்கு விஶேஷணத்வம் கொள்ளுகை உசிதமாகையாலுமாகிற இவ்வர்த்த2 ஸ்வாரஸ்யத்தைப் பற்ற இப்படி விப4ஜிக்கத் தட்டில்லை.

உபலக்ஷணமாவது:— உபலக்ஷ்யாத் ப3ஹிர்ப்பூ4தமாய், உபலக்ஷ்ய ப்ரதீத்யுபாயமான த4ர்மவிஶேஷம். "ஶாகா2

* சித்ரகு3ம் ஆநய - பல நிறமுடைய பசுவின் சொந்தக்காரனை அழைத்து வா.

/ த3ண்டி3நம் ஆநய - கைத்தடி வைத்திருப்பவனை அழைத்து வா.

யாம் சந்த்3ர:" இத்யாதி3. பிதாவுக்கு ஹிதபரத்வம் அஸாத4ாரணமாய், ப்ரியபரத்வம் இருவருக்கும் அவிஶிஷ்டமாயிருக்கை லோகஸித்3த4மிறே. மாதாவுக்கு ப்ரஜாஹிதபரத்வம் பாரதந்த்ர்ய ப4ஞ்ஜகமிறே. கிஞ்ச, "சரணம்" என்று ஏகவசன ப்ரயோக3ம் பண்ணினால் உபலக்ஷணமாய், விஶேஷணத்துக்கும் உபாயாந்வயம் ஸம்ப4வித்துவிடுமென்று தத்3வ்யாவ்ருத்த்யர்த்த2மிறே த்3விவசன ப்ரயோக3ம் பண்ணுகிறது. த்3விவசனம், மற்றொன்றையும் ஸஹியாதிறே. விஶேஷ்யப்ராத4ாந்யத: சொன்ன த்3விவசனம் பத்னீவிஶேஷணத்துக்கும் அவிஶிஷ்டமென்னில்: அப்போதும் ப்ராத4ாந்யம் விஶேஷ்யத்துக்கேயாய், விஶேஷணத்துக்கு அப்ராத4ாந்யமாகையாலே, அப்ரத4ானோபாயத்வமான புருஷகாரப4ாவமே ஸித்3தி4த்துவிடுமிறே. இருவரும் ப்ரத்யேகோபாயமென்னுமது "லக்ஷ்மீ விஶிஷ்டம் உபாயம்" என்கிறத்தோடு சேராது. விஶிஷ்டம் உபாயமென்று அங்கீ3கரித்து இவளுக்கும் ப2லப்ரத3த்வம் சொல்லும்போது ஈஶ்வரனுக்குப் ப2லப்ரத3ானஹேதுவான ஜ்ஞாநஶக்த்யாதி3களின்றியிலேயொழியவேணும். ஜ்ஞான ஶக்திகள் உண்டு என்னில்: அப்போது ஏதது3பாயப4ாவ நிரபேக்ஷமாக ஸ்வயமேவ ப2லப்ரத3க்ஷமனிறே. ப2லப்ரத3ான ஹேதுவான ஜ்ஞானஶக்த்யாதி3களை உண்டாக்குகிறாளென்னில்; கு3ணங்கள் வந்தேறியாய், ஸ்வாப4ாவிகங்களின்றியிலேயொழியும். ஸ்வாதந்த்ர்யதிரோஹிதங்களான வாத்ஸல்யாதி3களை ப்ரகாஶிப்பிக்கிறாப்போலே திரோஹிதஜ்ஞான ஶக்திகளை ப்ரகாஶிப்பிக்கிறாளென்னில்: அவற்றுக்கு ஸ்வாதந்த்ர்யம்போலே, இவற்றுக்கு ஒரு திரோத4ாயக கு3ணமில்லையே. உண்டென்னில், [a] "ஞானமஃதே கொண்டு எல்லாக் கருமங்களும் செய்" என்கிறபடியே ஜ்ஞானங்கொண்டு சோம்பாதே நிரந்தரஸ்ருஷ்டிபண்ணக் கூடாதிறே. யேந கேந ப்ரகாரேண உபாயாந்வயம்

[a] திருவாய் 3-10-8.



சொல்லில், 223. (**ஶீதோ ப4வ**) என்னவல்ல தி3வ்யஶக்தி உண்டாயிருக்க, ஸ்வபாரதந்த்ர்யஹானி வாராமல், 224. (**அந்தராத்மா ச மே ஶுத்3த4:**) என்று ஸ்வரக்ஷணே ஸ்வப்ரவ்ருத்தியாகிற அஶுத்3தி4 இத்தலையில் இல்லையென்றும், 224. (**தஸ்மிம்ஶ்ச ப3ஹவோ கு3ணா:**) என்று உபாயபூர்த்திக்கு அடியான கு3ணபூர்த்தி அத்தலைக்கே உள்ளதென்றும் த3ர்ஶிப்பித்து, ஸ்வப்ராப்திக்கும் **105. (தத் தஸ்ய ஸத்3ருஶம் ப4வேத்)** என்று ஸ்வஸ்வரூபானுரூப பாரதந்த்ர்யானுஸந்த4ானமாகத் தந்நிரபேக்ஷோபாயத்வத்தைப் பார்த்திருக்கும்படியான இவள் பரிஶுத்3த4 ப்ரக்ருதிக்கு அது சேராதிறே.

நநு, ஶ்ரிய:பதியே உபாயமென்று அங்கீ3கரிக்கவேண்டுமாகையாலே, நிரூப்யஸ்வரூபத்துக்குச் சொன்ன உபாயத்வம் நிரூபகஸ்வரூபத்துக்கும் 225. (**யத்3யபி ஸச்சித்த:**) என்கிற ந்யாயத்தாலே அநிவர்த்யமாய்க்கொண்டு தன்னடையே வாராதோ? என்னில்: ஸ்வரூப நிரூபகத்வேந நிரூப்ய நிரூபகங்களுக்கு அவர்ஜநீய ஸம்ப3ந்த4ம் உண்டேயாகிலும், உபாயவரணத3ஶையில் ஸ்வரூப நிரூபகங்களான ஜ்ஞாநாநந்த3ங்கள் உபயோக3மில்லாமையாலே நிரூபகமாத்ரமாய் நிற்கிறாப்போலே ப4க3வத்ஸ்வரூபநிரூபகமான லக்ஷ்மீஸ்வரூபமும், காரணத்வத3ஶையிற்போலே உபாயத3ஶையில் தன்னால் கொள்வதொரு ப்ரயோஜனமில்லாமையாலே, தத்ஸ்வரூப நிரூபகத்வமாத்ரத்திலே அந்வயித்து, தத3ஸாத4ாரணோபாயத்வத்தில் அந்வயியாமலிருக்கையாலே, நிரூபகமான ஏதத்ஸ்வரூபத்துக்கு உபாயத்வம் வாராதிறே. கிஞ்ச, உபாயவிஶேஷணமான கு3ணவிக்3ரஹங்களுக்கு ஸௌகர்யாபாத3கத்வேநவும், கார்யாபாத3கத்வேநவும், ஶுப4ாஶ்ரயத்வேநவும் கார்யபே4த3முண்டாகிறாப்போலே, தத்3விஶேஷணபூ4தையான பிராட்டிக்கும், உபாயத3ஶையில் உபாயத்வரஹிதமாகப் புருஷகாரத்வரூப கார்யபே4த3முண்டாகத் தட்டில்லை.

226. (லக்ஷ்மீப4ர்த்துர் தா3ஸதா3ஸஸ்ய தா3ஸ:) a "திருமாலே! நானும் உனக்குப் பழவடியேன்" என்கிறபடியே ஸ்வரூப த3ஶையில் ஶேஷத்வ ஸ்வரூபத்துக்கும், 227. (ஶ்ரியா ஸார்த்த4ம்) b "திருமாலே நின்றே ஆட்செய்ய" என்கிற படியே ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யத3ஶையில் கைங்கர் யத்துக்கும் மிது2னமே ப்ரதிஸம்ப3ந்தி4யாகவேண்டினவோ பாதி உப4யானுரூபமான உபாயத3ஶையிலும் அவஶ்யா பேக்ஷிதமான உபாயப்ரதிஸம்ப3ந்தி4த்வத்தில், ஸ்வவ்யதி ரிக்தஸமஸ்தஸஹாயாநபேக்ஷமான உபாயத்தினுடைய 131. (மாமேகம்) என்கிற நைரபேக்ஷ்ய ப4ஞ்ஜகமான உபாயத்வத்தில் அங்வயமற்று, தத3விரோத4மாகப் புருஷ காரத்வரூப ப்ரதிஸம்ப3ந்தி4த்வத்திலே இவளுக்கு அங்வய மாகக்கடவது.

நநு, ஸ்வாயம்பு4வே—228. (ஸர்வகாமப்ரதா3ம் ரம்யாம் ஸம்ஸாரார்ணவதாரிணீம் | க்ஷிப்ரப்ரஸாதி3நீம் தே3வீம் ஶரண் யாம் சிந்தயேதி3தி ||) என்றும், வைஷ்ணவே, 229. (ஆத்மவித்3யா ச தே3வி த்வம் விமுக்திப2லதா3யிநீ) என்றும், ப்3ராஹ்மே—230. (ஸக்ருத்3 விப4ாதா ஸர்வார்த்தி ஸமுத்3ர பரிஶோஷிணீ, ப4வப4ங்க3ாபஹாரிணீ, பரநிர்வாணதா3யிநீ) என்றும், / இத்யாதி3ப்ரமாணங்கள் இவளுடைய உபாய ப4ாவத்தைச் சொல்லிற்றேயாகிலும், அவை ஶரண்ய னுடைய இச்ச2ானுவிதா4யித்வ ஸூசகங்களாகக்கடவது. இதுக்கு நியாமகமென்னென்னில்: 231. (லக்ஷ்மீம் புருஷ காரேண வ்ருதவந்த:) என்றும், 232. (லக்ஷ்மீ: புருஷகாரேண வல்லப4ா ப்ராப்தியோகி3நீ | ஏதஸ்யாஶ்ச விஶேஷோऽயம் நிக3மாந்தேஷு ஶப்3த்3யதே ||) என்றும், 233. (லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்தி3ஷ்டா—நாந்யதா2 லக்ஷணம் ப4வேத் ||) என்றும், புருஷகாரத்வத்தையே லக்ஷணமாகச் சொல்லி

a திருப்பல்லாண்டு-11. b திருவாய் 8-3-8.

/ இங்கு சில வாக்கியங்கள் நழுவியுள்ளன.



அந்யதா2 லக்ஷணம் இல்லையென்று உபாயத்வத்தை நிஷேதி4த்ததிறே. அங்வயத்திலும் வ்யதிரேகம் அர்த்த2 தா3ர்ட்4யத்துக்கு உறுப்பாகையாலே, இதுவே ப்ரப3ல ப்ரமாண ப்ரஸித்3த4மாகையாலும், ப4க3வத3பி4மதமாகை யாலும், பிராட்டிக்கு அத்யந்தம் அபி4மதமாகையாலும், ஸம்ப்ரதா3ய ஸித்3த4மாகையாலும், ஏதத3னுகு3ணமாக அவற்றை யோஜிக்கத் தட்டில்லை. தத3னுகு3ணமாக இவற்றை யோஜிக்குமிடத்தில்,ப்ரப3லப்ரமாணவிரோத4மும், ப4க3வத3நபி4மதத்வமும்,லக்ஷ்ம்யநபி4மதத்வமும், ஸம்ப்ரதா3ய விரோத4மும் ஸம்ப4விக்கும். ஆகையாலே, ஸகலப்ரமாண ப்ரமாத்ரு பரிக்3ருஹீதமான புருஷகாரப4ாவமே ஸாராஸார விவேகசதுரர்க்குப் பரிக்3ராஹ்யம் என்றதாயிற்று. 234. (த4ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதா3ஶ்ச), 235. (யத்3யதா3சரதி ஶ்ரேஷ்ட2:) a "மேலையார் செய்வனகள் வேண்டுவன" என்னக்கடவதிறே.

ஆக, இஶ்லோகத்தாலே "பெரியபிராட்டியார் ஸ்வ கருணைகடாக்ஷலேஶத்தாலே ஸ்வாஶ்ரிதர்க்கு ஸகல புருஷார்த்த2ங்களையும் ப்ரஸாதி3த்தருளுவர்; ஸகலபுரு ஷார்த்த2 விலக்ஷணமோக்ஷத்தை, தத3ஸாத4ாரணோபாய பூ4தனாய், ஸ்வவஶவர்த்தியாய், ஸ்வாபாங்கே3ங்கி3தபரா தீ4னனான ஈஶ்வரனைக்கொண்டு கொடுப்பித்தருளுவர்; ஆனபின்பு, புருஷார்த்த2ாந்தரங்களோடு விலக்ஷண புருஷார்த்த2த்தோடு விஶேஷமற ஸகல ஶ்ரேயஸ்ஸூம் தத்ப்ரஸாத3த்தாலல்லது ஸம்ப4வியாது" என்னுமிடத்தை ஸ்தி2ரீகரித்தருளினாராய்த்து. ஸ்ரீஸாத்வதத்திலே, அவனுக்கு (தனக்கு?)மோக்ஷப்ரத3த்வமும், தே3விக்கு ஐஶ்வர்யப்ரத3த்வ மும் விப4ஜித்து ஸ்வயமேவ ஸ்பஷ்டமாக அருளிச் செய்தாரிறே. 3.

a திருப்பாவை-26.

4. ஶாந்தாநந்த(3)மஹாவிபூ4தி பரமம்
யத்3 ப்3ரஹ்ம ரூபம் ஹரே:
மூர்த்தம் ப்3ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம்
ரூபம் யத3த்யத்3பு4தம் ।
யாந்யந்யாநி யதா2ஸுகம்2 விஹரதோ
ரூபாணி ஸர்வாணி தாந்-
யாஹு: ஸ்வைரநுரூபரூபவிப4வைர்
கா3டோ4பகூ3டா4நி தே ॥

4. **பதவுரை:**— **ஶாந்த**-ஷடூ3ர்மிகளற்றதாய், **ஆநந்த3**–ஆநந்த3மயமாய், **மஹாவிபூ4தி**—பெரிய விபூ4திகளை உடைத்தாய், **பரமம்**—தனக்கு மேலானதற்றதாய், **ப்3ரஹ்ம**—பெரிதாயிருப்பதாலும், (பிறரைப்) பெரிதாகச் செய்வதாலும் ப்3ரஹ்மஶப்3த3த்தாலே சொல்லப்படுவதாயிருக்கும், **ஹரே: யத் ரூபம்**—ஹரியினுடைய யாதொரு ஸ்வரூபமுண்டோ, **தத: அபி**—அதைக்காட்டிலும், **தத் ப்ரியதரம்**—அந்த ப4க3வானுக்கு மிகவும் பிரியமாயிருப்பதும், **மூர்த்தம்**—கண்ணால் காணக்கூடியதும், **ப்3ரஹ்ம**—ப்3ரஹ்மஶப்3த3த்தால் சொல்லப்படுவதும், **அத்யத்3பு4தம்**—மிகவும் அத்3பு4தமானதுமான, **ரூபம் யத்** — யாதொரு ரூபம் உண்டோ, **யதா2ஸுகம்2 விஹரத:**—இஷ்டப்படி விளையாடும் எம்பெருமானுக்கு, **அந்யாநி ரூபாணி யாநி**—மற்றும் யாவை சில ரூபங்களுண்டோ, **தாநி ஸர்வாணி**—அந்த ரூபங்களெல்லாம், **தே**—உனக்கு, **ஸ்வை: அநுரூபரூபவிப4வை:**—அஸாத4ாரணங்களாய் தகுந்தவையாயிருக்கும் தி3வ்ய ரூபங்களால், **கா3டோ4பகூ3டா4நி ஆஹு:**—நன்றாக ஆலிங்க3னம் செய்யப்பட்டவையென்று (ப்ரமாணங்கள்) சொல்லுகின்றன.

---

4. அவதாரிகை:— (ஶாந்தேத்யாதி3) 236. (**த்ரயாணும் ப4ரதாதீ3நாம் ப்4ராத்ரூணும் தே3வதா ச யா। ராமஸ்ய ச மந:காந்தா ப்ராணேப்4யோऽபி க3ரீயஸீ ॥**) என்கிற ப்ரமாணானுஸாரேண "காந்தஸ்தே புருஷோத்தம:" என்று கர்த்தர்



யர்த்த2த்தையும், "ப2ணிபதி:" என்று தொடங்கிக் கர்மண்யர்த்த2த்தையும் அநுஸந்தி4த்து, "ஆக இப்படி உப4ய விபூ4தியிலுள்ளார்க்கும் ஆஶ்ரயணீயையாய், உப4ய விபூ4திநாத2னை ஆஶ்ரயித்துக்கொண்டிருக்கையாலே "ஸ்ரீ:" என்ற அஸாத4ாரணமான திருநாமத்தை உடையையாய், அவனுக்கும் பூஜ்யையாம்படியான கு3ண பூர்த்தியை உடைய உன்னை ஜ்ஞானஶக்த்யாதி3கு3ண ஹீனனான நான் ஸ்தோத்ரம் பண்ணுவது எங்ஙனே?" என்று பீ4தபீ4தராய், ஸ்தோத்ராந்நிவ்ருத்தரானார் ப்ரத2ம ஶ்லோகத்திலே.

இப்படி நிவ்ருத்தரானபடியைக் கண்டு, "இவர் பண்ணுகிற ஸ்தோத்ரத்தை ஶ்ரவித்து ஶ்ரவிப்பித்தாலன்றோ 'ஶ்ருணோதீதி—ஸ்ரீ:' 'ஶ்ராவயதீதி—ஸ்ரீ:' என்கிற நிருக்த்யனுரூபாஸாத4ாரணநாமம் நமக்கு நிலைநிற்பது. ஆனபின்பு இவர் யதா2ஸ்தோத்ரம் பண்ணவல்லராம்படி கடாக்ஷிப்போம்" என்று கணிசித்து, இவர்பக்கலிலே கருணா கடாக்ஷத்தைப் பண்ண, "இதொரு த3யாவிஶேஷமிருந்தபடியென்?" என்று தத்ஸௌலப்4யாநுஸந்த4ானத்தாலே ஸமாஹிதராய், ஸம்ப3ந்த4 ஜ்ஞானபூர்வமாக ஶரணம் புகுந்து, கீழ், "ஸ்ரீயதே" "ஶ்ரயதே" என்று சொன்ன வ்யுத்பத்தித்3வயார்த்த2மும் 163. (அஸ்யேஶாநா) இத்யாதி3 வேதா3ந்தஸித்3த4மென்னுமிடத்தை "லோகைகேஶ்வரி லோகநாத2த3யிதே" என்று ஸூசிப்பியாநின்றுகொண்டு ஸமாஹிதராய், ப4யமும் ஶமித்து ஸ்தோத்ரத்திலே ப்ரவ்ருத்தரானார் த்3விதீய ஶ்லோகத்திலே.

இப்படி ஆக்ஷேபஸமாத4ாநவ்யாஜேந ப்ரவ்ருத்தமான ஶ்லோகத்3வயத்தாலும், தத்பரத்வஸௌலப்4யங்களை அநுஸந்தி4த்து, 'திருவடிகளை ஆஶ்ரயித்தார்க்குத் தத்கடாக்ஷலேஶத்தாலே ஸகல புருஷார்த்த2ங்களும் ஸம்ப4விக்கும்; அதில்லாதார்க்கு ஒரு ஶ்ரேயஸ்ஸூம ஸித்3தி4யாது' என்று

கொண்டு பிராட்டியினுடைய ஸர்வஸமாஶ்ரயணீயத்வக்$_2$யாபநார்த்த$_2$மாக ஸகல புருஷார்த்த$_2$ப்ரத$_3$த்வத்தை அருளிச்செய்தார் த்ருதீயஶ்லோகத்தாலே. ஆக, இப்படி ஶ்லோகத்ரயத்தாலும் ப்ரக்ருதியான ஸ்ரீஶப்$_3$தா$_3$ர்த்த$_2$த்தை அருளிச்செய்து, அனந்தரம் ப்ரத்யயமான மதுப்பின் அர்த்த$_2$த்தை அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, ப$_4$க$_3$வத்ஸ்வரூபரூபகு$_3$ணாதி$_3$களில் தத்ஸஹத$_4$ர்மசாரிணியான இவளுடைய ஸ்வரூபாதி$_3$களுக்கு உண்டான அயோக$_3$வ்யவச்சே$_2$த$_3$த்தை அனுஸந்தி$_4$யாநின்றுகொண்டு, 221. (**லக்ஷ்ம்யா ஸஹ....ரக்ஷக:**) 227. (**ஶ்ரியா ஸார்த்த$_4$ம்**) என்கிறபடியே உப$_4$யவிபூ$_4$திக்கும் நித்யரக்ஷகமாய், நித்யப்ராப்யமான நித்யயோக$_3$த்தை அனுப$_4$வித்து நிரஸ்தஸமஸ்தப்ரதிப$_3$ந்த$_4$கராய், ப்ராப்தபரிபூர்ணமநோரத$_2$ராய், a "திருமாலால் எங்கும் திருவருள்பெற்று இன்புறுவர்" என்கிறபடியே ஶ்ரிய:பதியினுடைய நிர்ஹேதுகக்ருபையாலே நிரதிஶயானந்த$_3$த்தை ப்ராபித்து ஸ்தோத்ரத்தைத் தலைக்கட்டுகிறார் துரீயஶ்லோகத்தாலே.

வ்யா:—(ஶாந்தாநந்த மஹாவிபூ$_4$தி பரமம் யத்$_3$ ப்$_3$ரஹ்ம ரூபம்)என்கிற இவ்வளவாலே தி$_3$வ்யாத்மஸ்வரூபத்தை அனுப$_4$விக்கிறார். 237. (**ஶாந்தாநந்தம் சிதா$_3$நந்த$_3$ம் யத்$_3$ ப்$_3$ரஹ்ம பரமம் த்$_4$ருவம்। மஹாவிபூ$_4$திஸம்ஸ்தா$_2$நம் ஸர்வதஸ் ஸமதாம் க$_3$தம்॥**) என்கிற தி$_3$வ்யாத்மஸ்வரூபநிர்ணாயகப்ரமாணத்தை உட்கொண்டாய்த்து இவர் இப்படி அருளிச்செய்தது. (ஶாந்தேதி) ஶாந்தியாவது:— 238. (**அஶநாயாऽபிபாஸே ச ஶோகமோஹௌ ஜராம்ருதீ। ஷடூ$_3$ர்மிபி$_4$ர்விஶுத்$_3$தா$_4$**) என்று ஶ்ருதிஸித்$_3$த$_4$ஷடூ$_3$ர்மிரஹிதமாய், 339. (**அபக்ஷயவிநாஶாப்$_4$யாம் பரிணாமர்த்$_3$தி$_4$ஜந்மபி$_4$:। வர்ஜிதஶ் ஶக்யதே வக்தும் யஸ்ஸதா$_3$ऽஸ்தீதி கேவலம்॥**) என்று புராணரத்நோக்தப்ரகாரத்தாலே ஷட்$_3$பா$_4$வ விகாரரஹிதமுமாயிருக்கை. இத்தால் — அகி$_2$லஹேயப்ரத்யநீகமாயிருக்கும் தி$_3$வ்யாத்ம

a திருப்பாவை 30.



ஸ்வரூபம் என்றதாய்த்து. ஸ்வயம் ஹேயரஹிதமாயிருக்கையன்றிக்கே, ஹேயப்ரதிப$_4$டமுமாய், ஸ்வாஶ்ரிதஹேயநிவர்த்தகமுமாயிறே இருப்பது. ஹேயப்ரத்யநீகத்வம் சொன்ன இப்பத$_3$த்தாலே கல்யாணைகதாநத்வமும் அர்த்தா$_2$த: ஸித்$_3$த$_4$மாகிறது. "ஹேயப்ரத்யநீகத்வம் புக்கவிடத்தே கல்யாணைகதானத்வமும் புகும்"என்றிறே அருளிச்செய்தது. a "அருகலிலாய பெருஞ்சீர்" என்கிறபடியே. 240. (**அகி$_2$ல ஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந**) என்று உப$_4$யலிங்க$_3$ விஶிஷ்டவஸ்துவை அனுப$_4$வித்தருளினாரிறே பா$_4$ஷ்யகாரர். b "ஈஶ்வரன் அகி$_2$லஹேயப்ரத்யநீகாऽநந்தஜ்ஞாநாநந்தை$_3$கஸ்வரூபனாய்" என்று தத்$_3$தி$_3$வ்யஸூக்தியைப் பின்சென்று அனுப$_4$வித்தருளினாரிறே பிள்ளைலோகாசார்யரும். 237. (**ஶாந்தாநந்தம் சிதா$_3$நந்த$_3$ம்**) என்று முக்தகண்ட$_2$மாகச் சொன்ன லக்ஷணத்$_3$வயத்தில் இங்கு ஒன்றை ஒன்று லக்ஷிக்கிறது. இத்தால் 241. (**அபஹதபாப்மா விஜர:**) என்று தொடங்கி (**ஸத்யகாமஸ் ஸத்ய ஸங்கல்ப:**) என்கிற ப்ரமாணார்த்த$_2$ம் சொல்லிற்று.

* அநந்தபத$_3$த்தாலே த்ரிவித$_4$பரிச்சே$_2$த$_3$ரஹிதமாயிருக்கும் என்றபடி. அதாவது:—விபு$_4$த்வாத் தே$_3$ஶத: பரிச்சே$_2$த$_3$ரஹிதமுமாய், நித்யத்வாத் காலத: பரிச்சே$_2$த$_3$ரஹிதமுமாய், ஸமஸ்தவஸ்துப்ரகாரித்வாத் ஸ்வஸத்$_3$ருஶவஸ்து பரிச்சே$_2$த$_3$ரஹிதமுமாயிருக்கும் என்றபடி. அத$_2$வா, "ஶாந்தாநந்த$_3$(द)" என்று பாட$_2$மாய், 242. (**ஜ்ஞாநாநந்த$_3$மயம் யஸ்ய ஸ்வரூபம் பரமாத்மந:**) என்கிறபடியே ஆநந்த$_3$மயனாயிருக்கும் என்னவுமாம். c "உணர் முழுநலம்" என்னக்கடவதிறே. முழு உணர்வும், முழு நலமுமாய், 242*. (**யதா$_2$ ஸைந்த$_4$வக$_4$ந:**) என்னுமாபோலே விஜ்ஞானக$_4$னமுமாய், ப்ரஜ்ஞானக$_4$னமுமாயிறே ஸ்வரூபமிருப்பது. இத்தால் ஸ்வானுப$_4$வத$_3$ஶையில் ப்ரகாஶமுமாய் ஸுக$_2$

a திருவாய் 1-9-3. b தத்வத்ரயம் 141. c திருவாய் 1-1-2.

ரூபமுமாய் இருக்கும் என்கை. “ ஶாந்தாநந்த3 ” என்று ஸ்வரூபநிரூபகங்களான ஜ்ஞாநாநந்த3ாமலத்வாதி3களைச் சொன்ன இத்தால், நிரூபித ஸ்வரூபவிஶேஷணங்களான ஜ்ஞானஶக்த்யாத்3யஸங்க்2யேய கல்யாணகு3ணக3ணங்களும் உக்தப்ராயங்கள். ஸ்வரூபானுப3ந்தி4களாயிறே இவை இருப்பன. 21. (ஸஹஸ்ராக்ஷ:), 15. (ஸர்வஜ்ஞ:), 21. (ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ:), 152. (பரா஽ஸ்ய ஶக்தி:) இத்யாதி3 ப்ரமாண ஸித்3த4மிறே.

( மஹாவிபூ4தி ) மஹத்துக்களாய், ஶுத்3த4ா஽ஶுத்3த4ங்களான விபூ4தித்3வயத்தை உடைத்தாய். a “ அகல் விசும்பும் நிலனும் இருளார் வினைகெட ”, b “ அங்காதும் சோராமே ஆள்கின்ற”, 243. (பாதோ3ா஽ஸ்ய விஶ்வா பூ4தாநி। த்ரிபாத3ஸ்யா஽ம்ருதம் தி3வி ॥) என்கிறபடியே உப4யவிபூ4தியோக3மும் சொல்லுகிறது. (பரமம்) “பரோ மா யஸ்மாத் ஸ:— பரம:” என்று நிருபமமாகையாலே ஸர்வோத்க்ருஷ்டமாய். (யத்) 244. (ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்3ரஹ்ம), 245. (ஆநந்தோ3ா ப்3ரஹ்ம), 246. (ஆநந்தோ3ா ப்3ரஹ்மேதி வ்யஜாநாத்), 247. (நிஷ்களங்கோ நிரஞ்ஜந:) 157. (ந தத்ஸமஶ்சா஽ப்4யதி4கஶ்ச த்3ருஶ்யதே), c “ஒத்தார் மிக்காரை இலையாய”, 248. (ஸம்ஜ்ஞாயதே இத்யாதி3) d “மனனுணர்வளவிலன்” இத்யாதி3 ப்ரமாண ஸித்3தி4யை * யச்ச2ப்3த3ம் ஸூசிப்பிக்கிறது. (ப்3ரஹ்ம) 249. (ப்3ருஹத்த்வாத் ப்3ரும்ஹணத்வாச்ச ப்3ரஹ்ம இத்யபி4தீ4யதே) என்று நிரதிஶயப்3ருஹத்த்வப்3ரும்ஹணத்வம் உக்தமாய், இத்தால் ஸ்வரூபவிபு4த்வம் சொல்லுகிறது. (ரூபம்) ஸ்வரூபம். ஆக, அகி2லஹேய ப்ரத்யநீககல்யாணைகதானமாய், த்ரிவித4பரிச்சே2த3ாஹிதமாய், விபூ4தித்3வயநிர்வாஹகமுமாய், நிருபமமுமாய், விபு4வாய், ஸகலோபனிஷத் ப்ரஸித்3த4மான தி3வ்யாத்மஸ்வரூபத்தை அனுப4வித்தாராய்த்து. (ஶாந்த) என்கையாலே 250. (அவிகாராய ஶுத்3த4ாய)

a திருவிரு 33. b நாச்-திரு 11-3. c திருவாய் 2-3-2. d திருவாய் 1-1-2.



என்கிற பத3த்3வயார்த்த2மும், * அநந்தபத3த்தாலே 250. (நித்யாய) என்கிற பத3ார்த்த2மும், “பரம் ரூபம்” என்கையாலே 250. (பரமாத்மநே) என்கிற பத3ார்த்த2மும், மேலே “ரூபம்” என்கையாலே 250. (ஸதை3க ரூபரூபாய) என்கிற பத3ார்த்த2மும், “ ஹரேர் ப்3ரஹ்ம ” என்கையாலே 250. ( விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே ) என்கிற பத3ார்த்த2மும் ஸ்பஷ்டமாயிற்று.

( ஹரே: ) 251. (ஹரிர் ஹரதி பாபாநி) என்கிறபடியே ஸ்வாஶ்ரிதருடைய ஸ்வப்ராப்திப்ரதிப3ந்த4க ஸகலபாப நிவர்த்தகனானவனுடைய. அத2வா, (ஹரே:) 252. (தே3வ தே3வோ ஹரி: பிதா) என்கிறபடியே ஸகலசேதனர்க்கும் ஸாக்ஷாத் பிதாவானவனுடைய என்றுகவுமாம். 253. (பித்ரு மாத்ருஸூத) இத்யாதி3. 253*. (நாமஸஹஸ்ரவாந்) என்கிறபடியே a ஆயிரம் பேருடைய பிரானாயிருக்கவும், இவ்விடத்தில் “ ஹரி: ” என்ற திருநாமத்தை அருளிச்செய்ததுக்குக் கருத்தென்னென்னில் : பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாகப் பற்றின ப்ரீத்யதிஶயத்தாலே, b “அவாவறச் சூழரியை” என்றுப்போலே, ஸ்வானுப4வஸகலப்ரதிப3ந்த4கநிவ்ருத்திபூர்வக ஸ்வாபேக்ஷிதமான இருவருமான சேர்த்தியை யதா2மனோரத2ம் அபி4நிவேஶம் தீர அனுப4விப்பித்தபடியை ஸ்பஷ்டமாக்குகைக்காக “ஹரி:” என்ற திருநாமத்தை அருளிச்செய்கிறார். c“ஸர்வாபேக்ஷிதப்ரத3ான ஸர்வேஶ்வரனை” என்றிறே அருளிச்செய்தது. d “ஆர்த்திஹரத்வவிஶிஷ்டன்” என்றிறே நிக3மத்திலும் அருளிச்செய்தது.

254. (ப்3ரஹ்மாணமிந்த்3ரம் ருத்3ரஞ்ச யமம் வருணமேவ ச। ப்ரஸஹ்ய ஹரதே யஸ்மாத் தஸ்மாத்3த4ரிரிதீர்யதே ॥) என்கிறபடியே e “நெற்றிமேல் கண்ணனும் நிறை மொழி வாய் நான்முகனும் நீண்ட நால் வாய் ஒற்றைக்கை வெண்

a திருவாய் 9-3-1. b திருவாய் 10-10-11. c ஈடு 10-10-11.
d ஆசார்யஹ்ருத3யம்-218. e பெரியதிரு 11-6-3.

பகட்டில் ஒருவனையும் உள்ளிட்ட அமரரோடும் — கடலரையன் விழுங்காமல் தான் விழுங்கி" 192. (தம: பரே தே3வ ஏகீப4வதி) என்கிறபடியே தன் ஸங்கல்பத்தினுல் ஏகீப4விக்கும்படியான ஸர்வஸம்ஹர்த்ருத்வத்தையும் 255. (அஶேஷாணும் பூ4தாநாம் ப்ரப4வோ ஹரி:) 256. (யஸ்ய நாபி4ஸமுத்3பூ4தபங்கஜாத3ப4வஜ்ஜக3த்)என்கிறபடியே அப்யய பூர்வகமான ஜக3த்காரணத்வத்தையும் ப்ரதிபாதி3க்கிற இத்திருநாமத்தை அருளிச்செய்கையாலே, நாராயண ஶப்3தா3ர்த்த2த்தை விவக்ஷித்து அருளிச்செய்தார் என்னுமிடம் தோற்றுகிறது. 257. (நராஜ்ஜாதாநி தத்த்வாநி). 193. (ஆபோ நாரா இதி ப்ரோக்தா:)என்கிறபடியே ஜக3த்காரணத்வ வாசகமாயிறே நாராயணஶப்3த3ந்தான் இருப்பது. அந்த ஜக3த்காரணத்வந்தான் [a]"ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா அன்று நான்முகன்தன்ஞெடு தேவருலகோடு உயிர் படைத்தான்" என்கிறபடியே அப்யய பூர்வகமாயிருக்குமிறே; அந்த அப்யயபூர்வகமான ஜக3த்காரணத்வத்தை இத்திருநாமம் ப்ரதிபாதி3க்கையாலே நாராயணபத3பர்யாயமென்னுமிடம் ஸித்3த4மிறே. ஆகையாலேயிறே 258. (விஶ்வம் நாராயணம் ஹரிம்) என்றும், [b]"அற்புதன் நாராயணனரி" என்றும் வேதா3ந்தத்3வயத்திலும் ஸஹபடி2த்தது. ப4ட்டரும், 259. (அங்க்4ரீ ஹரேராஶ்ரயே), 260. (தஸ்யைவேதி ஹரேர் விவிச்ய கதி2தம்) என்று வாக்யத்3வயத்திலும் நாராயணபத3த்3வயபர்யாயமாக ஹரி ஶப்3த3த்தை அருளிச்செய்தாரிறே.

அனந்தரம் கீழ் அனுபூ4தமாய் அமூர்த்தமுமான ஸ்வரூபத்துக்கு ஆஶ்ரயமாய், மூர்த்தமான தி3வ்யமங்க3ள விக்3ரஹத்தை அனுப4விக்கிருர் (மூர்த்தம் ப்3ரஹ்ம) என்று தொடங்கி, (யத3த்யத்3பு4தம்) என்னுமளவாக. (மூர்த்தம்) ஸ்பர்ஶரூபாதி3கு3ணங்களோடே கூடி பரமபத3பர்யங்காதி3 தே3ஶபரிச்சி2ந்ந விக்3ரஹமாயிருக்கை. (மூர்த்தம்) 261.

a திருவாய் 4-10-1. b திருவாய் 8-6-10.



(ஶக்தய: பஞ்ச விக்2யாதா: பஞ்சோபநிஷத3ாக்2யயா) என்கிறபடியே; பஞ்சோபனிஷத்துக்களாவன:— 262. (பரமேஷ்டீ2 புமாந் விஶ்வோ நிவ்ருத்திஸ்ஸர்வ ஏவ ஹி) என்கிறபடியே, பரமேஷ்டி2 புருஷ விஶ்வ நிவ்ருத்தி ஸர்வஸம்ஜ்ஞிகங்களான அப்ராக்ருதபூ4தபஞ்சகங்கள். ஏவம்வித4 பஞ்சோபனிஷத்துக்கள்தான் ஶப்3தா3தி3 பஞ்சகு3ணவிஶிஷ்டங்களாயிருக்கையாலே 262. (பரமேஷ்டீ2 ஸ்ம்ருதஶ்ஶப்3தே3 ஸ்பர்ஶே து புருஷ: ஸ்ம்ருத: | விஶ்வாத்மா தேஜஸி ப்ரோக்தோ நிவ்ருத்த்யாத்மா ரஸே ஸ்ம்ருத:|| ஸர்வாத்மா கதி2தோ க3ந்தே4 விஷயே புருஷஸ் ஸ்ம்ருத: ||) என்கிறபடியே பரமேஷ்ட்2யாதி3ஸம்ஜ்ஞிகங்களான பூ4தபஞ்சகமும், ஶப்3த3ஸ்பர்ஶரூப ரஸக3ந்த4ஸம்ஜ்ஞிகபஞ்சகு3ணத்வேந ப்ரமாண ப்ரஸித்3த4ங்களாயிருக்குமே. ஆகையாலே, ஏதாத்3ருஶபஞ்சகு3ணகாகாஶாத்3யப்ராக்ருத பூ4தபஞ்சகமயமாய் இருக்கையாலே "மூர்த்தம்" என்கிருர்.

இச்சேதனன் கர்மானுகு3ணமாகப் பரிக்3ரஹிக்கும் தே3ஹமாகிலிறே [a]"மண்ணும் நீரெரி கால் மஞ்சுலாவும் ஆகாசமுமாம்" [b]"மஞ்சு சேர் வானெரி நீர் நிலம் காலிவை மயங்கி நின்ற அஞ்சு சேராக்கை" என்கிறபடியே ப்ராக்ருதபஞ்சபூ4தமயமாயிருப்பது. இங்ஙனன்றிக்கே, 263. (பஞ்சைதாஶ் ஶக்தய: ப்ரோக்தா: பரஸ்ய பரமாத்மந: | அஶேஷஜக3த3ாத4ாரா: பதே3 தி3வ்யே வ்யவஸ்தி2தா: ||) என்று ப4க3வச்ச2க்தித்வேந ஸமஸ்தகார்ய பதா3ர்த்த2ாதா4ராங்களாய்க்கொண்டு பரமபத3த்திலே ஏதத்3விக்3ரஹமாயும் ததீ3யவிக்3ரஹங்களாயும், விமான மண்டப கோ3புர ப்ராஸாத3ாதி3ரூபேணவும் பரிணமிக்கிற அப்ராக்ருதபூ4தபஞ்சகமாயிறே இருப்பது. ஆகையாலேயிறே 264. (ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர் மாம்ஸமேதோ3ாऽஸ்தி2ஸம்ப4வா) 265. (ந பூ4தஸங்க4ஸம்ஸ்த2ாநோ தே3ஹோऽஸ்ய பரமாத்மந:) 266.

a பெரியதிரு 1-9-6. b பெரியதிரு 9-7-8.

(**பஞ்சஶக்திமயோ தே3வ:**) என்று ப்ராக்ருதத்வநிஷேத4 பூர்வகமாக அப்ராக்ருதத்வத்தை ப்ரதிபாதி3க்கிறது. இப்படி அப்ராக்ருதமாகையாலே ஶுத்3த4ஸத்வமயமு மாயிறே விக்3ரஹம் இருப்பது. ரஜஸ்தமஸ்ஸுக்கள் கலசாதே ஶுத்3தி4யோக3த்தாலே கேவலஸத்வமாய், 267. (**ஸத்த்வம் விஷ்ணுப்ரகாஶகம்**) 268. (**தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத் ப்ரகாஶகமநாமயம்**) என்று அதிப்ரகாஶக வஸ்துவாகையாலே ஜ்ஞாநாநந்த3மயசேதன தத்3கு3ண திரோதா4யக த்ரிகு3ணாத்மக ப்ராக்ருதஶரீரம்போலன்றிக்கே, ஸ்வவைலக்ஷண்யத்தாலே ஸ்வாந்தர்க்க3தசாமீகரப்ரகாஶக மாணிக்யமஞ்ஜூஷைபோலே ஸ்வாந்த:ஸ்தி2த தி3வ்யாத்ம ஸ்வரூப தத்3கு3ணக3ண ஸம்யக்ப்ரகாஶநசாதுர்ய ஸஹிதமுமாயிருக்கும்.

இப்படி அப்ராக்ருதமாய், ஶுத்3த4ஸத்வாத்மகமாயிருந்ததேயாகிலும் 269. (**ஸவ்யம் பாத3ம் ப்ரஸார்ய ஶ்ரிதது3ரிதஹரம்**) இத்யாதி3ப்படியே சரணகமல கரகமல நயநாரவிந்த3 வக்த்ராரவிந்த3 ப்ரமுக2 தி3வ்யாவயவஸங்க4ாதாத்மகமாயிருக்கையாலே 270. (**யத்ர தூ4மஸ் தத்ராக்3நி:**) இதிவத், அநித்யத்வவ்யாப்த ஸாவயவத்வ ஹேதுவாலே அநித்யத்வவ்யாப்ய ஸாவயவத்வ ப்ரயுக்த ப்ராக்ருத ஶரீரவத் அநித்யத்வம் ப்ரஸங்கி3க்குமே என்னில்: ந ப்ரஸங்க3:; ஸர்வத்ர அநித்யத்வே ஸாவயவத்வம் ஹேதுவாகமாட்டாது. பின்னையேதென்னில்; அவயவாரப்3த4த்வமே அநித்யத்வே ஹேதுவாகக்கடவது. இங்ஙனன்றாகில், ஹஸ்தபாதா3த்3யவயவஸம்யுக்தனான சேதநனுக்கும் அநித்யத்வம் ப்ரஸங்கி3க்கும். ஆகையால், தி3வ்யவிக்3ரஹத்துக்கு அவயவாரப்3த4த்வே ப்ரமாணமில்லாமையாலும், 271. (**ஸதா3 பஶ்யந்தி ஸூரய:**), 272. (**பஶ்யந்தி ச ஸதா3 தே3வம் நேத்ரைர் ஜ்ஞாநேந**) இத்யாத்3யுபப்3ரும்ஹணோப ப்3ரும்ஹணங்களாலே நித்யத்வேந ப்ரதீதங்களாகையாலும், விக்3ரஹநித்யத்வம் ஸித்3த4மிறே.



இங்ஙனேயாகிலும் இதுதான் அநந்தாவதாரகந்த3மாகையாலே இந்த விக்3ரஹத்தினின்றும் ஸாது4பரித்ராணார்த்த2மாக, 273. (**ப3ஹுதா4 விஜாயதே**), 274. (**ப3ஹூநி**), a "பிறப்பில் பல் பிறவிப் பெருமான்" என்னும்படி b யுகே3 யுகே3 ஸம்ப4விக்கிற ப3ஹுதி3வ்யஜன்மங்கள்தோறும் அஸங்க்2யாதங்களான c அபி4மதோருதே3ஹங்கள் உண்டாகையாலே உபசயாத்மகப்ராக்ருததே3ஹம்போலே ஸதத விகாராஸ்பத3மாயிருக்குமோ? என்னில்: 275. (**யஸ்ய தி3வ்யம் ஹி தத்3 ரூபம் ஹீயதே வர்த்த4தே ந ச**), d "சுருக்குவாரையின்றியே சுருங்கினாய் சுருங்கியும் பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்து பெற்றியோய்" என்கிறபடியே கர்மானுகு3ணவிகாரரஹிதமாகவும், 276. (**ஸம்ப4வாம்யாத்மமாயயா**) e "தேவரிரக்கவேண்டி வந்து பிறந்ததும்" 277. (**தே3வைரர்த்தி2தோ ஜஜ்ஞே**) என்று c இச்சா2க்3ருஹீதமாகவும் சொல்லுகையாலே ஏகரூபமாயிருக்கும்; கர்மக்ருதவிகாரம் தோ3ஷாயவும், இச்சா2க்3ருஹீதவிகாரம் கு3ணாயவுமாகையாலே ஏகரூபமாயிருக்கத் தட்டில்லை. அநேகவிக்3ரஹம் பரிக்3ரஹிக்கச்செய்தேயும் 250. (**ஸதை3கரூபரூபாய**) என்றதிறே.

278. (**கிமாத்மிகா ப4க3வதோ வ்யக்தி:**) என்று ப்ரஶ்னம் பண்ண, 278. (**யதா3த்மகோ ப4க3வாந்**) என்று உத்தரம் உக்தமானவனந்தரம், 278. (**கிமாத்மகோ ப4க3வாந்**) என்று ப்ரஶ்னம் பண்ண, (**ஜ்ஞாநாத்மகோ ப4க3வாந்**) என்று அஜட3த்வாபி4ப்ராயேண ஜ்ஞாநாத்மகத்வம் உத்தரமாகச் சொல்லுகையாலே, ஜ்ஞாநாத்மகமான ப4க3வத்3ரூபம் ஸ்வரூபானுரூபமுமாய், 279. (**வித்3யுல்லேகே2வ பா4ஸ்வரா**), f "நிலவும் சுடர் சூழொளிமூர்த்தி" g "ஒண் சுடர்க்கற்றை" 280. (**தேஜஸாம் ராஶிமூர்ஜிதம்**) இத்யாதி3ப்ரமாணப்ரகாரேண நிரவதி4கதேஜோரூபமுமாயிருக்கும். ப4க3வத்3 விக்3ரஹமும், நித்யமுக்தர் விக்3ரஹங்களும் பஞ்சோப

---

a திருவாய் 2-9-5. b கீ3தை 4-5,8,9. c வி-பு 6-5-84. d திருச்ச-109.
e திருவாய் 6-4-5. f திருவாய் 6-10-1. g திருவாய் 1-7-4.

னிஷண்மயமாகையாலே, உக்தவிஶேஷணவிஶிஷ்டத்வம் அவிஶிஷ்டமாய், ஏகஜாதீயத்3ரவ்யமயமாயிருந்ததேயாகிலும், ஏகஜாதீயத்3ரவ்யாத்மக மணித்3யுமணிமஹோமத்4யே க2த்3யோதகாந்திவத், ஸாவதி4கதேஜோரூப ததீ3யவிக்3ரஹத்தை க2த்3யோதகல்பம் என்னலாம்படி நிரவதி4க தேஜோரூபமாயிருக்கை — ஏதத்3விஷயம். இனி அவ்வளவன்றிக்கே நிரவதி4க ஸௌந்த3ர்ய ஸௌக3ந்த்4ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்3யநந்தகு3ணக3ண ஸமவேதமாய், 281. (ஸ்பு2ரத்கிரீட) 282. (ஸ்வோசித விசித்ர) இத்யாத்3யுக்தப்ரக்ரியயா ஸ்பு2ரத்கிரீடமகுடாத்3யஸங்க்2யேய தி3வ்யபூ4ஷணபூ4ஷிதமாய், ஆப4ரணகோடியிலும் ஆயுத4கோடியிலும் அந்விதங்களான ஶங்க2 சக்ர க3தா3ஸி ஶார்ங்கா3த்3யஸங்க்2யேய தி3வ்யாயுத4ஶோபி4தமாய், 283. **(ஏஷ ப்3ரஹ்ம ப்ரவிஷ்டோऽஸ்மி க்3ரீஷ்மே ஶீதமிவ ஹ்ரத3ம்)** என்கிறபடியே ஸகலதாபஹரமாய், a "இன்பம்...சிற்றின்பம்...ஒழிந்தேன்" என்னலாம்படி ஸமஸ்தபோ4க3வைராக்3ய ஜனகமாய், யோகி3த்4யேயமாய், ஶுபா4ஶ்ரயமுமாயிருக்கிற விக்3ரஹவைலக்ஷண்யத்தை அனுஸந்தி4த்து "மூர்த்தம் ப்3ரஹ்ம" என்கிறார்.

இதில் ஸௌந்த3ர்யமாவது:— ஸர்வதா3 அனுப4வியா நின்றாலும் b அப்பொழுதைக்கப்பொழுது ஏகைகாவயவமே அபூர்வவத் விஸ்மயகராநேக போ4க3பரம்பரா ஜனகாத்யந்த ஶக்தியாலே 271. **(ஸதா3 பஶ்யந்தி)** பண்ணுகிற ஸூரிகளை நிரதிஶயகாந்திஸாக3ர ஸ்வதரங்க3தாட3ன தரளசித்த வ்ருத்திகராம்படி தத்3த்3ருஷ்டிநிமஜ்ஜநக்ஷமமான தி3வ்யாவயவஸூக்ஷ்மை. "ஸௌந்த3ர்யஸாக3ரத்திலே ஆழங்காற்பட்டுக் கரையேறமாட்டாதே, c "அரும்பினை அலரை" என்னலாம்படியான 284. (யௌவநோந்முகீ2பூ4தஸுகுமார தநு:)" என்றதிறே.

a திருவாய் 4-9-10. b திருவாய் 2-5-4. c பெரியதிரு 7-10-1.



ஸௌக3ந்த்4யமாவது:—a "தெருவெல்லாம் காவிகமழ்" என்கிறபடியே த்ரிபாத்3விபூ4தியடைய b "வாசம் செய்" என்னுமாபோலே ஸ்வதி3வ்யக3ந்த4த்தாலே வாஸிதமாம்படி ஸர்வதோதி3க்கமாகப் புறப்பட்டு ப்ரவஹிக்கிற நாநாவித4தி3வ்யக3ந்த4ம். 285. **(ஸர்வக3ந்த4ஸ் ஸர்வரஸ:)** என்னக்கடவதிறே.

ஸௌகுமார்யமாவது:— 286. **(புஷ்பஹாஸ இதி நாம து3ஹாநம் ஸௌகுமார்யமதிவாங்மநஸம் ந:)** என்கிறபடியே பேசப்பிசகும்படியாய், தி3வ்யமஹிஷிகள் c வடிக்கோல வாள் நெடுங்கண்களாலே அடுத்தடுத்துப் பார்க்கிற பார்வையிலும் த3ாங்திஶீலமாய், d "மலர்மகள் பிடிக்கும் மெல்லடி" என்கிறபடியே கூசித்தொடவேண்டும்படியான e புஷ்பஹாஸாக்2யமாயிருக்கிற அத்யந்தமார்த்த3வம்.

லாவண்யமாவது:—287. **(ஏகைகஸ்மிந் பரமவயவேऽநந்த ஸௌந்த3ர்யமக்3நம் ஸர்வம் த்3ரக்ஷ்யே கத2மிதி முத4ா மாமதா2 மந்த3 சக்ஷு:। த்வாம் ஸௌப4ாத்ரவ்யதிகரகரம் ரங்க3ராஜாங்க3காநாம் தல்லாவண்யம் பரிணமயிதா விஶ்வ-பாரீணவ்ருத்தி ||)** என்கிறபடியே, ஓரோ அவயவங்களின் மேலே அநந்தஸௌந்த3ர்யத்திலே முழுகினதாய்க்கொண்டு ஸௌந்த3ர்யஸாக3ரத்திலே ஆழங்காற்பட்டுக் கரையேற மாட்டாதே தடுமாறுகிற நித்யமுக்தர் திருக்கண்களை f "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ ?" என்கிறபடியே தி3வ்யாவயவங்களுக்கு அந்யோந்யமுண்டான ஸௌப4ாத்ரத்தாலே தத்3வ்யதிகரத்தைப் பண்ணி நின்றுகொண்டு, ஸர்வபாரீணவ்ருத்தியாய், ஸர்வாவயவங்களையும் கரைகண்டு அனுப4வித்துக் கரையேற்றவற்றாய், அத்தாலே லாவண்யமாகிற மரக்கலமென்று சொல்ல

a திருவாய் 9-6-1. b திருவாய் 10-10-2. c இர-திருவ 82.
d திருவாய் 9-2-10. e வி.ஸஹஸ்ர. f திருவாய் 3-1-1.

லாம்படியாய், ஸௌந்த3ர்யஸாக3ரநிமக்3னர்க்கு நாவம் போலே தாரகமாய், ஆபாத3சூடம் அவிரதமாய், ப்ரவஹிக்கிற நிரவதி4ககாந்திஸாக3ர கல்லோலமாலைபோலே விளங்குகிற ஸமுத3ாயஸுஷுமை.

(ஹே மந்த3!) அல்ப! லாவண்யமென்றொன்று உண்டென்று அறியாத (சக்ஷு:) கண்ணே! (ஏகமேகம் ஏகைகம்; தஸ்மிந்) ஓரோன்றான அவயவத்தில் (பரம்) அதன்மேலே; (அநந்தம் ஸௌந்த3ர்யம் தஸ்மிந் மக்3நம் ஸத்) அபரிச்சி2ன்னமான ஸௌந்த3ர்யத்தில் முழுகினதாய்க்கொண்டு; (ஸர்வம்) மற்றெல்லா அவயவஸௌந்த3ர்யத்தையும்; (கத2ம்) எங்ஙனே; (த்3ரக்ஷ்யே) அனுப4விக்கப்போகிறேன்; (இதி) என்று; (முத4ா) வ்யர்த்த2மாக; (மா மத2ா:) மா மந்த2:; விசாரம் மா குரு; ஶங்கியாதேகொள்; "யத:" என்று அத்4யாஹாரம்; யாதொரு காரணத்தாலே; (ரங்க3ராஜாங்க3காநாம்) பெரியபெருமாளுடைய தி3வ்யாவயவங்களுக்கு; (ஸுப்4ராதுர்ப4ாவ: ஸௌப்4ராத்ரம்; தஸ்ய வ்யதிகரம் கரோதீதி, தத்) ஒன்றுக்கொன்று நல்ல ப்4ராதாவாயிருக்கையினுடைய—ஸௌக4ட்யத்தினுடைய — ஸம்ப3ந்த4த்தைப் பண்ணாநின்றுள்ள; (வ்யதிகர:) ஸாங்க3த்யம்; தத் கரோதீதி ததே2ாக்தம்; ஸௌஹார்த்3மித்யர்த்த2:. (தத்) ஸர்வவிலக்ஷணமான; (லாவண்யம்) ஸமுத3ாய ஶோபை4யானது; அன்றிக்கே, "தஸ்ய லாவண்யம்" என்றாய், பெரியபெருமாளுடைய லாவண்யமென்றபடியாகவுமாம். (த்வாம்) ஸர்வத்தையும் அனுபு3பூ4ஷிக்கிற உன்னை. (விஶ்வஸ்மிந் பாரீணவ்ருத்தி: யஸ்ய தத்) ஸர்வாவயவத்திலும் அக்கரைப்பட்ட அனுப4வத்தை உடைத்தானதாக; (பரிணமயிதா) பண்ணப்போகிறது. விஶ்வேஷு-ஸர்வேஷ்வவயவேஷு, பாரீணா-பாரங்க3தா, வ்ருத்தி:-அனுப4வோ யஸ்ய தத் ததே2ாக்தம்; பரிணமயிதா-பரிணதம் கர்த்தா; ல்யுட்.



யௌவனமாவது:—288. (யுவாऽகுமார:) என்கிறபடியே கௌமாராவஸ்தை2யில் கழிவான த3ஶையாய், யௌவநாவஸ்த2ாப்ராது3ர்ப்ப4ாவமாயிருக்கை. 284. (க்வ யௌவநோந்முகீ2பூ4த ஸுகுமாரதநுர்ஹரி:) என்றதிறே. ஏதாத்3ருஶஸ்தி2தியே நிலைநிற்கையாலே நித்யயௌவனமாயிருக்கும். ஸர்வேஶ்வரன் ஆஶ்ரிதரக்ஷணார்த்த2மாக அஸங்க்2யாத தி3வ்யவிக்3ரஹ பரிக்3ரஹம்பண்ணி ஶைஶவாத்3யவஸ்த2ாபன்னனாகிலும் இந்த யௌவனாவஸ்தை2 குலையாமையாலேயன்றோ a "உன்னையுமொக்கலையில் கொண்டு தமில் மருவி உன்னொடு தங்கள் கருத்தாயின செய்து வரும் கன்னியரும் மகிழ" என்று ஶைஶவாவஸ்தை2யிலே யௌவனம கண்டு அனுப4வித்தது.

ஆக, ஏதாத்3ருஶாஸங்க்2யேய கல்யாணகு3ணவிஶிஷ்டதையால் உண்டான தி3வ்யவிக்3ரஹவைலக்ஷண்யத்தை "மூர்த்தம்" என்று தொடங்கி அனுப4விக்கிறார். ப்3ரஹ்மஶப்3த3த்தாலே விக்3ரஹத்தினுடைய அதிமஹத்த்வமும் ஸ்வாஶ்ரிதாஜ்ஞாநநிவ்ருத்திபூர்வக விஜ்ஞானவிகாஸகத்வமும் விவக்ஷிதம். இதற்கு "மூர்த்தம் ப்3ரஹ்ம" என்றிறே திருநாமம். (ததோऽபி தத்ப்ரியதரம்) ஆனந்த3மயஸ்வரூபத்திலும், ஆனந்த3ாவஹதத3ஸங்க்2யாதகு3ணங்களிலும் அதிஶயித ஸௌந்த3ர்யாதி3கு3ணயோக3த்தாலே நிரதிஶயானந்த3ாவஹமாய், அத ஏவ நிரவதி4கப்ரீதிவிஷயமாயிருக்கை. 289. (இச்சா2க்3ருஹீதாऽபி4மதோருதே3ஹ:) என்னக்கடவதிறே. (தத்ப்ரியதரம்) தஸ்ய ப்ரியதரம் என்னுதல்; "தத்" என்று வ்யஸ்தமாக்கி "யத் தத்" என்று யோஜிக்கவுமாம். அப்போது 290. (புருஷம் க்ருஷ்ணபிங்க3ளம்), 291. (ஸர்வயஜ்ஞமயம் வபு:), 292. (த்4யேயஸ்ஸத3ா), 293. (கிரீடகுண்ட3லத4ரம்) இத்யாதி3 விக்3ரஹவைலக்ஷண்யப்ரதிபாத3கப்ரமாண ப்ரஸித்3த்4யதிஶயத்தை த்3யோதிப்பிக்கிறது. (ரூபம்) இங்கே ரூபஶப்3த3ம்

---

a பெரியாழ்திரு 1-5-8.

விக்₃ரஹபரம். யச்ச₂ப்₃த₃ம், ஏகரூபத்வ நித்யத்வ நிரவத்₃யத்வ அசிந்த்யத்வ ப்ரகாஶக ப்ரமாண ப்ரஸித்₃தி₄பரம். (அத்யத்₃பு₄தம்) ஸ்வஸந்நிவேஶ பூர்வோக்த ஸௌந்த₃ர்யாத்₃யனந்தகு₃ணயோக₃ங்களாலே, அபி₄நவரஸஜனகமாய், அதிவிஸ்மயாவஹமாயிருக்கை. இவ்விடத்திலே 293. (ஸ்வாபி₄மதாநுரூபைகரூப - விக்₃ரஹ) என்கிற சூர்ணிகாத்₃வயப்ரதிபாதி₃த விக்₃ரஹவைலக்ஷண்யமெல்லாம் அநுஸந்தே₄யம்.

இத்தால், ஸ்வரூபதத்₃கு₃ணத்யந்தாபி₄மதமாய், ப்₃ரஹ்மஶப்₃த₃வாச்யமாய், அதிவிஸ்மயாவஹமாய், ஶ்ருதிஸ்ம்ருத்யாதி₃ப்ரஸித்₃த₄மான, ஸாலம்ப₃னயோக₃விஷயாऽஸாத₄ாரண விக்₃ரஹத்தை ஶுப₄ாஶ்ரயமாக அனுப₄வித்தாராய்த்து. * யோகி₃த்₄யேயமிறே. 294. (ஸத₃ா த்₄யேயம்). மேல், இந்த விக்₃ரஹத்தினின்றும் ஆஶ்ரிதார்த்த₂மாகப் பரிக்₃ரஹித்த வ்யூஹவிப₄வாந்தர்யாமிரூபங்களை அநுப₄விக்கிறார் (யாந்யந்யாநி) இத்யாதி₃யாலே. "யத₂ாஸுக₂ம் விஹரதோ ஹரே: அந்யாநி யாநி ரூபாணி ஸந்தி, தாநி ஸர்வாணி" என்று ஸம்ப₃ந்த₄ம். (யாநி) இவ்விடத்தில் யச்ச₂ப்₃த₃ம், 295. (ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம்) என்கிற அவதாரரஹஸ்யப்ரகாஶக ப்ரமாணப்ரஸித்₃தி₄யை ஸூசிப்பிக்கிறது. "யாநி" என்கிற ப₃ஹுவசனம், 273. (அஜாயமாநோ ப₃ஹுதா₄ விஜாயதே), [a] "பிறப்பில் பல் பிறவிப் பெருமான்", 274. (ப₃ஹூநி) 295*. (ரூபாணி ஶதஶோऽத₂ ஸஹஸ்ரஶ:) இத்யாதி₃களில் சொல்லுகிற அவதாரா-ஸங்க்₂யாதத்வத்தை ஸூசிப்பிக்கிறது. (அந்யாநி) பரரூபத்தினின்றும் [b] ஆதியஞ்சோதியுருவை அங்குவைத்திங்குப் பிறக்கையாலே, தத்ஸந்நிவேஶவர்ணாதி₃களைப்போலே வைலக்ஷண்யவிஶிஷ்டங்களாயிருக்கை. "அந்ய:" என்கிறாப்போலே, "அந்யாநி" என்கையாலே வ்யாவ்ருத்தியும் தோற்றுகிறது.

[a] திருவாய் 2-9-5. [b] திருவாய் 3-5-5.



(யத₂ாஸுக₂ம்) மனுஷ்யஸஜாதீயனாய் அவதரித்த த₃ஶையிலும், ஸ்வாப₄ாவிகஸுக₂ாதி₃நிவ்ருத்தியென்ன, து₃:க்க₂ப₄ாக்த்வமென்ன, இவையின்றிக்கே கேவலம் ஸுக₂மாயிருக்குமதொரு படி. (ஸுக₂ம் யத₂ா ப₄வதி தத₂ா) க்ரியாவிஶேஷணமான அவ்யயம். (விஹரத:) என்கிற இத்தால் அவதாரரூபங்கள் இச்ச₂ாக்₃ருஹீதங்கள் என்னுமிடமும் [a] "வீட்டைப் பண்ணி விளையாடும்", [b] "இன்புறுமிவ்விளையாட்டுடையான்" 296. (க்ரீட₃தோ ப₂ாலகஸ்யேவ) என்கிறபடியே க்ரீட₃ார்த்த₂ங்களாயிருக்குமென்னுமிடமும் க₃ர்ப்பி₄தம். ஆகையால் இவனுடைய ஶரீரக்₃ரஹணம் கர்மக்ருதமன்றிக்கே கேவலம் த₄ர்மத்ராணார்த்த₂மாயிருக்குமென்கை. 297. (நாகாரணாத்) இத்யாதி₃. (ஸர்வாணி தாநி) கீழ்ச்சொன்ன இத்தால் ஸ்வரூபரூபாதி₃களில் அத்யல்பமாகிலும் பெரியபிராட்டியாராலே அநங்விதமாயிருப்பதில்லை என்னுமிடத்தை த்₃யோதிப்பிக்கைக்காக "ஸர்வாணி தாநி" என்கிறார். 23. (ஸர்வாணி ரூபாணி) என்றாப்போலே இருக்கிறதாய்த்து. (தைஸ் ஸ்வைரநுரூபரூபவிப₄வை:) உன்னுடைய அஸாத₄ாரணங்களான அனுரூபரூபவிப₄வங்களாலே; அனுரூபங்களான ரூபஸம்பத்துக்களாலே என்கை. அத₂வா, ரூபங்களாகிற விப₄வங்களாலே என்னவுமாம். இவ்விடத்தில் ரூபஶப்₃த₃ம் [c] ப₄க₃வந்நாராயணாபி₄மதாநுரூபங்களான ஸ்வரூபரூபகு₃ணவிபூ₄திகளைச் சொல்லுகிறது. (யத₂ாஸுக₂ம் விஹரதோ ஹரேஸ் ஸர்வாணி ரூபாணி தைஸ்தைரனுரூபரூபவிப₄வைர் கா₃டே₄ாபகூ₃ட₄ாநீத்யாஹு:) த்வத₃பி₄மதானுரூபங்களான தத்ஸ்வரூபரூபகு₃ணாதி₃கள், தத₃பி₄மத தத்ஸ்வரூபாத்₃யனுரூபங்களான உன்னுடைய ரூபாதி₃களாலே யத₂ாக்ரமம் த்₃ருட₄ஸம்ப₃த்₃த₄ங்களாயிருக்குமென்று ஶ்ருதிஸ்ம்ருதிகள், வஸிஷ்ட₂பராஶரபாராஶர்யாதி₃களான பரமர்ஷிகள் சொல்லுவர்கள். அனுரூபமாயிருக்கையாவது:— ரத்னகாஞ்சன ந்யாயத்தாலே ஸ்வஸம்ப₃ந்தி₄க்கு ஶோப₄ாऽऽதி

[a] நாச்-திரு 14-9. [b] திருவாய் 3-10-7 [c] ஶரணாக₃திக₃த்₃யம்-1.

[அர்த்தம், ப்ரகரணம், அடையாளம், ஔசித்யம் ஆகிய வற்றைக்கொண்டு சொற்களுக்குப் பொருளை நிர்ணயிக்க வேண்டும்.]

223. 106-வது ப்ரமாணம் காண்க.

224. ஆஶம்ஸேயம் ஹரிஶ்ரேஷ்ட2
க்ஷிப்ரம் மாம் ப்ராப்ஸ்யதே பதி: ||
அந்தராத்மா ச மே ஶூத்3த4ஸ்
தஸ்மிம்ஶ்ச ப3ஹவோ கு3ணா: ||

[வானரத்தலைவனே! என் கணவன் விரைவிலேயே என்னை அடைந்து விடுவாரென்று எதிர்பார்க்கிறேன். என் மனம் (தன்னை ரக்ஷிக்கத் தான் முயற்சிசெய்வதாகிற) அஶூத்3தி4யற்றிருக்கிறது. அவனிடமும் கு3ணங்கள் பல வுள்ளன.]

225. யத்3யபி ஸச்சித்தோ ந நிர்ப்பு4க்3ணதை3வதம் கு3ண-க3ணம் மநஸாऽநுத4ாவேத், தத2ாப்யந்தர்க்கு3ணமேவ தே3வதாம் ப4ஜதே, தத்ராபி ஸகு3ணைவ தே3வதா ப்ராப்யதே

[ஸத்தாகிற ப்3ரஹ்மத்தை தியானிப்பவன், தே3வனாகிற அந்த ப்3ரஹ்மத்தை விட்ட கு3ணஸமூஹத்தைமாத்திரம் மனஸ்ஸினாலே தியானிக்கமுடியாவிடினும், கு3ணங்களுடன் கூடிய தே3வதையை உபாஸிக்கவே செய்கிறான்; அதிலும் கு3ணத்துடன் கூடிய தே3வதையை அடையவே செய்கிறான்.]

226. ......பு4வநப4வந ஸ்தி2த்பாயைகஹேதோ:
லக்ஷ்மீப4ர்த்துர் நரஹரிதநோர் தா3ஸதா3ஸஸ்ய தா3ஸ:||

[உலகங்களைப் படைத்து அளித்து அழிக்கும் ஒரே காரண புருஷனாயிருக்கும் ஶ்ரிய:பதியான நரஸிம்ஹனுக்கு தா3ஸனுக்கும் தா3ஸனுக்கும் தா3ஸனாயிருக்கிறேன்.]

224. ரா-ஸு 37-14. 225. த்3ரமிட3பா4ஷ்யம் 226. பா4க3வதம் (?)



227. வைகுண்டே2 து பரே லோகே
ஶ்ரியா ஸார்த்த4ம் ஜக3த்பதி: |
ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா
ப4க்தைர் பா4க3வதைஸ்ஸஹ ||

[மேலான உலகமான வைகுண்ட2த்தில், ஜக3த்பதியும், நினைக்கவொண்ணாத ஸ்வரூபத்தை உடையவருமான விஷ்ணு, ப4க்தர்களுடனும், பா4க3வதர்களுடனும் கூடியவராய் ஶ்ரீதே3வியுடன் கூட எழுந்தருளியிருக்கிறார்.]

228. ஸர்வகாமப்ரதா3ம் ரம்யாம் ஸம்ஸாரார்ணவதாரிணீம் |
க்ஷிப்ரப்ரஸாதி3நீம் தே3வீம் ஶரண்யாம் சிந்தயேதி3தி ||

[எல்லா இஷ்டங்களையும் தருமவளும், அழகியவளும், ஸம்ஸார ஸாக3ரத்தைத் தாண்டுவிப்பவளும், விரைவில் அருள் செய்யுமவளுமான பிராட்டியை இவ்வண்ணமாக ஶரணமடையத் தகுந்தவளாக நினைக்கக் கடவன்.]

229. ஆத்மவித்3யா ச தே3வி த்வம் விமுக்திப2லதா3யிநீ

[தே3வியே! நீயே ஆத்மஜ்ஞானத்தைக் கொடுப்பவளாயும், முக்திப2லத்தைக் கொடுப்பதையே இயற்கையாக உடையவளாயுமிருக்கிறாய்.]

230. ஸக்ருத்3விபா4தர் ஸர்வார்த்திஸமுத்3ரபரிஶோஷிணீ
ப4வப4ங்க3ாபஹாரிணீ பரநிர்வாணதா3யிநீ

[உத3யமாகி அஸ்தமிக்காத சோதிபோலே பிரகாசிப்பவள்; ஸமஸ்தது3:க்க2ங்களாகிற ஸமுத்3ரத்தையும் வற்றச்செய்பவள்; ஸம்ஸாரமாகிற தாழ்மையைப் போக்கடிப்பவள்; மேலான மோக்ஷத்தை அளிப்பவள் (என்பவை பிராட்டியின் ஆயிரம் திருநாமங்களிற் சில.)]

231. ஆகிஞ்சந்யைகஶரணா: கேசித்3 பா4க்3யாதி4கா: புந: |
மத்பதா3ம்பே4ாருஹத்3வந்த்3வம் ப்ரபத்3ய ப்ரீதமாநஸா: ||

227. ஶைவபுராணம். 228. ஸ்வாயம்பு4வம். 229. வி-பு 1-9-20.
230. ஶ்ரீஸஹஸ்ரநாமம் 87,122,23. 231. விஷ்வக்ஸேநஸம்ஹிதை.

லக்ஷ்மீம் புருஷகாரேண வ்ருதவந்தோ வராநந ।
மத்க்ஷமாம் ப்ராப்ய ஸேநேஶ ப்ராப்யம் ப்ராபகமேவ
லப்3த்4வா க்ருதார்த்த2ா: ப்ராப்ஸ்யந்தே [மாம் ॥
மாமேவாநந்யமாநஸா: ॥

[அழகிய முகத்தையுடைய ஸேநாபதியே! ஒரு கைம்முதலும் அற்றிருக்கையையே பற்ருசாகக்கொண்ட சில ப4ாக்3யம் மிக்கவர்களோவென்னில், என் திருவடித்தாமரையிணையை அன்புடன் கூடிய மனத்தராய் ஶரணடைந்து, லக்ஷ்மீ தே3வியைப் புருஷகாரமாகப்பற்றி, என் பொறுமைக்கு இலக்காகி என்னையே ப்ராப்யப்ராபகங்களாகக்கொண்டு செய்ய வேண்டியதைச் செய்தவர்களாய், வேறென்றிலும் நெஞ்சு செல்லப் பெருதவர்களாய் என்னையே அடைவார்கள்.]

232. அஹம் மத்ப்ராப்த்யுபாயோ வை ஸாக்ஷால் லக்ஷ்மீபதி: ஸ்வயம் ।
லக்ஷ்மீ: புருஷகாரேண வல்லப4ா ப்ராப்தியோகி3நீ ।
ஏதஸ்யாஶ்ச விஶேஷோऽயம் நிக3மாந்தேஷு ஶப்3த்3யதே ॥

[லக்ஷ்மீபதியான நானே என்னையடைய உபாயமாவேன். என் பிரியையான லக்ஷ்மியானவள் புருஷகாரத்தினுல் என்னை அடைய உதவிபுரிகிருள். (புருஷகாரத்வமாகிற) இப்பெருமை இவளுக்கு வேதா3ந்தங்களில் சொல்லப் படுகிறது.]

233. மத்ப்ராப்திம் ப்ரதி ஜந்தூநாம் ஸம்ஸாரே பததாமத4: ।
லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்தி3ஷ்டா பரமர்ஷிபி4: ॥
மமாபி ச மதம் ஹ்யேதந்நாந்யதா2ா லக்ஷணம் ப4வேத் ॥

[ஸம்ஸாரத்தில் கீழே விழுகின்ற ஜந்துக்களுக்கு என்னை அடையும் விஷயத்தில் லக்ஷ்மீதே3வியானவள் பரமரிஷிகளாலே புருஷகாரத்வத்தில் வரம்புகட்டப்பட்டிருக்கிருள். எனக்கும் இதுவே இஷ்டம். வேருன (உபாயத்வமாகிற) ஆகாரம் அவளுக்கு இல்லை.]

232. பாஞ்சராத்ரம். 233. பாஞ்சராத்ரம்.



234. த4ர்மஜ்ஞஸமய: ப்ரமாணம் வேதா3ாஶ்ச

[த4ர்மத்தையறிந்தவர்களுடைய ஆசாரம் (முக்கியமான) ப்ரமாணம். வேத3ங்களும் ப்ரமாணம்.]

235. யத்3 யதா3ாசரதி ஶ்ரேஷ்ட2ஸ் தத் ததே3வேதரோ ஜந: ।
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ் தத3நுவர்த்ததே ॥

[ஞானியானவன் எந்தெந்தக்கர்மங்களை அனுஷ்டி2க்கிருனே, அந்தந்தக் கர்மங்களையே (ஞானமற்ற) மற்ற மனிதனும் அனுஷ்டி2க்கிருன். அந்த ஞானி கர்மங்களை எவ்வளவாக அனுஷ்டி2க்கிருனே, அவ்வளவையே லோகமும் அநுஷ்டி2க்கிறது]

236. த்ரயாணும் ப4ரதாதீ3நாம் ப்4ராத்ருணும் தே3வதா ச யா ।
ராமஸ்ய ச மந:காந்தா ப்ராணேப்4யோऽபி க3ரீயஸீ ॥

[ப4ரதன் முதலான மூன்று ஸஹோத3ரர்க்கும் எந்தப் பிராட்டியானவள் தே3வதையாயிருக்கிருளோ, ராமனுக்கும் மநோவல்லபை4யாய், ப்ராணனைக்காட்டிலும் ப்ரியையா யிருக்கிருளோ...]

237. ஶாந்தாநந்தம் சிதா3ாநந்த3ம் யத்3 ப்3ரஹ்ம பரமம் த்4ருவம் ।
மஹாவிபூ4தி ஸம்ஸ்த2ாநம் ஸர்வதஸ் ஸமதாம் க3தம் ॥

[ஆறு ஊர்மிகளுமற்றதாய், அளவற்றதாய், ஜ்ஞாநாநந்த3 மயமாய், உயர்ந்ததாய், நிலையானதாய், பெரிய விபூ4திகளையும், திருமேனியையும் உடையதாய், எங்கும் ஸமநிலையைப் பெற்றதான யாதொரு ப்3ரஹ்மஸ்வரூபம் உண்டோ...]

238. அஶநாயாபிபாஸே ச ஶோகமோஹௌ ஜராம்ருதீ ।
ஷடு3ர்மிபி4ர் விஶுத்3த4ா......... ॥

[பசி, தாகம், சோகம், மோகம், கிழத்தனம், மரணம் என்னும் ஆறு ஊர்மிகளற்றது.]

234. ஆபஸ்தம்ப3த4ர்மஸூத்ரம். 235. கீ3தை 3-21. 236. ரா-ஸு 55-26. 237. ல-த 17-5. 238. ஶ்ருதி.

239. அபக்ஷய விநாஶாப்$_4$யாம் பரிணாமர்த்தி$_4$ஜந்மபி$_4$: ।
வர்ஜித: ஶக்யதே வக்தும் யஸ்ஸத$_3$ாऽஸ்தீதி கேவலம் ॥

[குறைவுபடுதல், நாசமடைதல், மாறுபாடடைதல், வளருதல், பிறத்தல், இவைகளற்றவனாகவும், எப்போதும் ‘இருக்கிறான்’ என்றே சொல்லப்படுபவனாகவுமிருப்பவன் ப$_4$க$_3$வான்.]

240. அகி$_2$லஹேயப்ரத்யநீக கல்யாணைகதாந...ஸ்வரூப

[தாழ்வு அனைத்துக்கும் எதிர்த்தட்டாகவும், மங்க$_3$ளங்களுக்கு ஒரே இருப்பிடமாகவுமிருக்கும் ஸ்வரூபத்தையுடையவன்.]

241. ய ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர்
விஶோகோऽவிஜிக$_4$த்ஸோऽபிபாஸஸ் ஸத்யகாமஸ்
ஸத்யஸங்கல்பஸ் ஸோந்வேஷ்டவ்ய:

[எந்த ஆத்மாவானவன் பாபமற்றவனாகவும், கிழத்தனமற்றவனாகவும், மரணமற்றவனாகவும், ஶோகமற்றவனாகவும், பசியற்றவனாகவும், தாகமற்றவனாகவும் உண்மையான க்ல்யாணகு$_3$ணங்களையும், வீணாகாத ஸங்கல்பங்களையுமுடையவனாகவும் இருக்கிறானோ அவன் தேடத்தக்கவன்.]

242. ஜ்ஞாநாநந்த$_3$மயம் யஸ்ய ஸ்வரூபம் பரமாத்மந:

[எந்தப் பரமாத்மாவின் ஸ்வரூபம் ஜ்ஞாநாநந்த$_3$மயமாயுள்ளதோ...]

242*. யத$_2$ா ஸைந்த$_4$வக$_4$நோऽநந்தரோऽப$_3$ாஹ்ய: க்ருத்ஸ்நோ ரஸக$_4$ந ஏவ ஏவம் வா அரேऽயமாத்மாऽநந்தரோऽப$_3$ாஹ்ய: க்ருத்ஸ்ந: ப்ரஜ்ஞாநக$_4$ந ஏவ

[எப்படி உப்புக்கட்டியானது எல்லா இடத்திலும் முழுவதும் ரஸம் நிறைந்துள்ளதோ, அப்படியே இந்த ஆத்மா எல்லா இடத்திலும் முழுவதும் ஞானமயமாகவேயுள்ளது.]

---

239. வி-பு 1 2-11. 240. ஶர-க$_3$த்$_3$யம்-5. 241. ச$_2$ாந் 8·7-1.
242*. ப்$_3$ருஹ 6-5-13.



243. ஏதாவாநஸ்ய மஹிமா அதோ ஜ்யாயாம்ஶ்ச பூருஷ: ।
பாதே$_3$ாऽஸ்ய விஶ்வா பூ$_4$தாநி த்ரிபாத$_3$ஸ்யாம்ருதம் தி$_3$வி ॥

[இவனுடைய மஹிமை இப்படிப்பட்டது. பரமபுருஷன் இதைக் காட்டிலும் மேலானவன். (ப்ராக்ருதமான) எல்லா உலகங்களும் இவனுடைய (விபூ$_4$தியில்) கால் ப$_4$ாக$_3$ம். பரமபத$_3$த்தில் இவனுடைய (விபூ$_4$தியில்) அழிவற்ற முக்கால் ப$_4$ாக$_3$முள்ளது.]

244. ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்$_3$ரஹ்ம । யோ வேத$_3$ நிஹிதம் கு$_3$ஹாயாம் பரமே வ்யோமந் । ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ । ப்$_3$ரஹ்மணா விபஶ்சிதேதி ॥

[(விகாரமற்றிருப்பதால்) ஸத்யமாயும், ஞானமயமாயும், (அளவற்றதாயிருப்பதால்) அநந்தமாயுமுள்ள ப்$_3$ரஹ்மத்தை ஹ்ருத$_3$ய கு$_3$ஹையிலிருப்பதாக எவன் உபாஸிக்கிறானோ, அவன் பரமபத$_3$த்தில் ஸர்வஜ்ஞனான ப்$_3$ரஹ்மத்துடன் கூட எல்லாக் கல்யாணகு$_3$ணங்களையும் அநுப$_4$விக்கிறான்.]

245. ஆநந்த$_3$ ஆத்மா ப்$_3$ரஹ்ம

[ஆநந்த$_3$மயனான ஆத்மாவே ப்$_3$ரஹ்மம்.]

246. ஆநந்தே$_3$ா ப்$_3$ரஹ்மேதி வ்யஜாநாத்

[ஆநந்த$_3$ம் ப்$_3$ரஹ்மமென்று அறிந்தார்.]

247. நிஷ்களங்கோ நிரஞ்ஜநோ நிர்விகல்போ
நிராக்$_2$யாதஶ் ஶுத்$_3$தே$_4$ா தே$_3$வ ஏகோ நாராயண: ।

[களங்கமற்றவனாய், தோ$_3$ஷமற்றவனாய், ப்ராக்ருதமான பே$_4$த$_3$நாமங்களற்றவனாய், ஶுத்$_3$த$_4$னாயிருக்கும் தே$_3$வன் நாராயணன் ஒருவனே.]

248. ஸம்ஜ்ஞாயதே யேந தத$_3$ஸ்ததோ$_3$ஷம்
ஶுத்$_3$த$_4$ம் பரம் நிர்மலமேகரூபம் ।
ஸந்த்$_3$ருஶ்யதே வாப்யதி$_4$க$_3$ம்யதே வா
தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யது$_3$க்தம் ॥

---

243. பு·ஸூ-3. 244. தை-ஆந 1-2. 245. தை·ஆந-5.
246. தை-ப்$_4$ருகு$_2$·6. 247. நாராயணோபநிஷத்-2. 248. வி·பு-6-5-87.

[எந்த அறிவினுல், தோ₃ஷமற்றதும், ஶுத்₃த₄மானதும், மிகவும் மலமற்றதும், ஒப்புயர்வற்றதுமான அந்தப் பர வஸ்து அறியப்படுகிறதோ, பார்க்கப்படுகிறதோ, அடை யப்படுகிறதோ, அதுவே ஜ்ஞாநம்; அதைக் காட்டிலும் வேருனது அஜ்ஞானம்.]

249. ப்₃ருஹத்த்வாத் ப்₃ரும்ஹணத்வாச்ச தத் ப்₃ரஹ்மேத்யபி₄தீ₄யதே

[பெரிதாயிருப்பதாலும், (பிறரைப்) பெரிதாகச் செய்வ தாலும் ப்₃ரஹ்மமென்று சொல்லப்படுகிறது அது.]

250. அவிகாராய ஶுத்₃த₄ாய நித்யாய பரமாத்மநே।
ஸதை₃கரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே ॥

[விகாரமற்றவனுய், ஶுத்₃த₄னுய், நித்யனுய், பரமாத்மாவாய், எப்போதும் ஒருபடிப்பட்ட ரூபத்தை உடையவனுய், எல்லா ரையும் ஜயிப்பவனுன விஷ்ணுவுக்கு நமஸ்காரம்.]

251. ஹரிர் ஹரதி பாபாநி து₃ஷ்டசித்தைரபி ஸ்ம்ருத:।
அநிச்ச₂யாऽபி ஸம்ஸ்ப்ருஷ்டோ த₃ஹத்யேவ ஹி பாவக:॥

[கெட்ட மனத்தரால் (விருப்பமில்லாமல்) நினைக்கப்பட்ட போதிலும் ஹரியானவன் பாபங்களைப் போக்கடிக்கிருன். விருப்பமில்லாமல் தொடப்பட்டபோதிலும் நெருப்பு சுட்டே தீருமன்ருே.]

252. த்வம் மாதா ஸர்வலோகாநாம் தே₃வதே₃வோ ஹரி: பிதா।
த்வயைதத்₃ விஷ்ணுநா சாம்ப₃ ஜக₃த் வ்யாப்தம் சராசரம் ॥

[தாயே! எல்லாவுலகங்கட்கும் நீ அன்னை; தே₃வதே₃வனுகிய ஹரி தந்தை. உன்னுலும் விஷ்ணுவாலும் இவ்வுலகம் வியாபிக்கப்பட்டுள்ளது.]

253. பித்ரு மாத்ரு ஸுத ப்₄ராத்ரு தா₃ர மித்ராத₃யோऽபி வா।
ஏகைகப₂லலாப₄ாய ஸர்வலாப₄ாய கேஶவ: ॥

249. வி-பு 3-3-22. 250. வி-பு 1-2-1. 251. ஹர்யஷ்டகம்.
252. வி-பு 1-9-126.



[தந்தை, தாய், மகன், ஸஹோத₃ரன், மனைவி, நண்பன் முதலானுர், ஒவ்வொரு ப₂லனை அடைவதின்பொருட்டேயா வர்கள். கேஶவன் எல்லாப் ப₂லன்களையும் அடைவதற் காக ஏற்பட்டவன்.]

253*. 101-வது ப்ரமாணம் காண்க.

254. ப்₃ரஹ்மாணமிந்த்₃ரம் ருத்₃ரஞ்ச யமம் வருணமேவ ச।
ப்ரஸஹ்ய ஹரதே யஸ்மாத் தஸ்மாத் ஹரிரிதீர்யதே ॥

[பிரமனையும், இந்திரனையும், உருத்திரனையும், யமனையும், வருணனையும் ப₃லாத்கரித்து ஸம்ஹரிக்கிருனுகையால் ஹரி யெனப்படுகிருன்.]

255 & 256. ரக்ஷது த்வாமஶேஷாணும் பூ₄தாநாம் ப்ரப₄வோ ஹரி:।
யஸ்ய நாபி₄ஸமுத்₃பூ₄தபங்கஜாத₃ப₄வஜ் ஜக₃த் ॥

[எவனுடைய நாபி₄க்கமலத்திலிருந்து உலகம் உண்டா யிற்ருே, ஸர்வபூ₄தகாரணனுன அந்த ஹரி உன்னை ரக்ஷிக்கட்டும்.]

257. நராஜ்ஜாதாநி தத்த்வாநி நாராணீதி ததோ விது₃:।
தாந்யேவ சாயநம் தஸ்ய தேந நாராயண: ஸ்ம்ருத: ॥

[நரனுகிற ப₄க₃வானிடமிருந்து உண்டானவை தத்துவங்க ளெல்லாம். ஆகையால் அவற்றை நாரங்களென்று அறி கின்றனர். அவையே அவனுக்கு இருப்பிடமாயின. ஆகையால் அவன் நாராயணன் என்று எண்ணப்படு கிருன்.]

193. ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ:।
தா யத₃ஸ்யாயநம் பூர்வம் தேந நாராயண: ஸ்ம்ருத: ॥

[ஜலம் நாரமெனப்படுகிறது. நரனுகிற ப₄க₃வானிடமிருந்து உண்டானதன்ருே அது. அந்த ஜலம் அவனுக்கு முதலில்

254. ஹர்யஷ்டகம். 255&256. வி-பு 5-5-14.
257. ப₄ார-ஆநு 186-7. 193. மநு 1-10.

இருப்பிடமாயிற்று. ஆகையால் அவன் நாராயணனென்று எண்ணப்படுகிறான்.]

258. விச்வம் நாராயணம் ஹரிம்

[உலகிற்கெல்லாம் அந்தர்யாமியாயும், ஸம்ஹாரகனுகவுமிருப்பவன் நாராயணனே.]

259. ஈசாநாம் ஜகதாமதீசதயிதாம் நித்யாநபாயாம் ச்ரியம்
ஸம்ச்ரித்யாச்ரயணேசிதாகிலகுணஸ்யாங்க்ரீ ஹரேராச்ரயே ।
இஷ்டோபாயதயா ச்ரியா ச ஸஹிதாயாத்மேச்வராயார்த்தயே
கர்த்தும் தாஸ்யமசேஷமப்ரதிஹதம் நித்யம் த்வஹம் நிர்மம: ॥

[உலகிற்கு ஈச்வரியாய், ஸர்வேச்வரனுக்குப் பத்னியாய், என்றும் அகலகில்லாதவளான பிராட்டியை (புருஷகாரமாக) ஆச்ரயித்து, (உபாயமாக) ஆச்ரயிக்கத்தகுந்த எல்லா குணங்களையுமுடைய ஹரியினுடைய திருவடியிணைகளை இஷ்டோபாயமாகப் பற்றுகிறேன். பிராட்டியுடன் கூடிய ஆத்மேச்வரனை பகவானிடம், தடையற்றதாய் ஒழிவில்காலமெல்லாம் வழுவிலா அடிமை செய்யவேண்டுமென்று மமகாரமற்றவனாய்ப் பிரார்த்திக்கிறேன்.]

260. மந்த்ரப்ரஹ்மணி மத்யமேந நமஸா பும்ஸ: ஸ்வரூபம் கதி:
கம்யம் சிக்ஷிதமீக்ஷிதேந புரத: பச்சாதபி ஸ்தாநத: ।
ஸ்வாதந்த்ர்யம் நிஜரக்ஷணம் ஸமுசிதா வ்ருத்திச்ச நாந்யோசிதா
தஸ்யைவேதி ஹரேர் விவிச்ய கதிதம் ஸ்வஸ்யாபி நார்ஹம் தத: ॥

[பெரியதிருமந்திரமான திருவஷ்டாக்ஷரத்தில் நடுவிலுள்ள 'நம:' என்னும் சொல்லை முன்னும் பின்னும் கூட்டியும், இருந்தபடியும் பார்க்கும்போது ஜீவனுடைய ஸ்வரூபம், உபாயம், பலம் என்னும் மூன்றும் சிக்ஷிக்கப்படுகிறது. ஸ்வாதந்த்ர்யம், தன்னை ரக்ஷித்தல், ஸ்வரூபாநுரூபமான கைங்கர்யம் ஆகிய இவை வேறொருவருக்கும் உரியவையல்ல; அந்த ஹரிக்கே உரியவை என்று விளக்கிச் சொல்லப்படுகிறது. ஆகையால் இவை தனக்கும் உரியவையல்ல.]

261. சக்தய: பஞ்ச விக்யாதா: பஞ்சோபநிஷதாக்யயா

[பஞ்சோபநிஷத்துக்களென்று பெயர்பெற்ற ஐந்து சக்திகள் ப்ரஸித்திபெற்றவை.]

262. பரமேஷ்டீ புமாந் விச்வோ நிவ்ருத்திஸ் ஸர்வ ஏவ ஹி ।
பரமேஷ்டீ ஸ்ம்ருத: சப்தே ஸ்பர்சே து புருஷ: ஸ்ம்ருத: ॥
விச்வாத்மா தேஜஸி ப்ரோக்தோ நிவ்ருத்த்யாத்மா ரஸே ஸ்ம்ருத: ।
ஸர்வாத்மா கதிதோ கந்தே விஷயே புருஷஸ் ஸ்ம்ருத: ॥

[பரமேஷ்டி, புமான், விச்வன், நிவ்ருத்தி, ஸர்வன் என்னும் ஐந்தும் பஞ்சோபநிஷத்துக்களாம். பரமேஷ்டி சப்தத்தையும், புமான் ஸ்பர்சத்தையும், விச்வன் ரூபத்தையும், நிவ்ருத்தி ரஸத்தையும், ஸர்வன் கந்தத்தையும், புருஷன் விஷயத்தையும் உடையனவாகச் சொல்லப்படுகிறது.]

263. பஞ்சைதா: சக்தய: ப்ரோக்தா: பரஸ்ய பரமாத்மந: ।
அசேஷஜகதாதாரா: பதே திவ்யே வ்யவஸ்திதா: ॥

[(இவைகளைக் காட்டிலும்) மேலானவனான பரமாத்மாவுக்கு சக்திகளாகச் சொல்லப்படும் இவ்வைந்தும் பரமபதத்திலிருந்துகொண்டு எல்லா உலகையும் தாங்குகின்றன.]

258. தை-நா 11. 259. அஷ்டச்லோகி-6. 260. அஷ்டச்லோகி-2.

261to263. பாஞ்சராத்ரம்.

264. ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர்
மாம்ஸமேதே$_3$ா(அ)ஸ்தி$_2$ஸம்ப$_4$வா

[அவனுடைய திருமேனி — மாம்ஸம், மஜ்ஜை, எலும்பு ஆகிய இவற்றுலுண்டான ப்ரக்ருதி ஸம்ப$_3$ந்த$_4$முள்ள உடம்பல்ல.

265. ந பூ$_4$தஸங்க$_4$ஸம்ஸ்தா$_2$நோ தே$_3$ஹோ(அ)ஸ்ய பரமாத்மந:

[இந்தப் பரமாத்மாவின் திருமேனி பஞ்சபூ$_4$தங்களுடைய சேர்க்கையால் உண்டானதன்று.]

266. பஞ்சஶக்திமயோ தே$_3$வ:

[ஐந்து ஶக்திகளை உருவாகக்கொண்ட தே$_3$வன்.]

267. ஸத்த்வம் விஷ்ணுப்ரகாஶகம்

[ஸத்வகு$_3$ணமானது விஷ்ணுவைப் பிரகாசிப்பிப்பது.]

268. தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத் ப்ரகாஶகமநாமயம்

[அந்த முக்கு$_3$ணங்களில் ஸத்வகு$_3$ணமானது நிர்மலமாயிருக்கையால் (வஸ்துக்களின் உண்மையை) அறிவிப்பது; ஆரோக்$_3$யத்தை அளிப்பது.]

269. ஸவ்யம் பாத$_3$ம் ப்ரஸார்ய
ஶ்ரிதது$_3$ரிதஹரம் த$_3$க்ஷிணம் குஞ்சயித்வா
ஜாநுந்யாத$_4$ாய ஸவ்யேதரமிதரபு$_4$ஜம்
நாக$_3$பே$_4$ாகே$_3$ நித$_4$ாய।
பஶ்சாத்$_3$ பா$_3$ஹுத்$_3$வயேந
ப்ரதிப$_4$டஶமநே த$_4$ாரயந் ஶங்க$_2$சக்ரே
தே$_3$வீபூ$_4$ஷாதி$_3$ஜுஷ்டோ ஜநயது
ஜக$_3$தாம் ஶர்ம வைகுண்ட$_2$நாத$_2$: ||

264. வராஹபுராணம் 34-40. 265. ப$_4$ார-ஶாந்தி 206-60.
266. பாஞ்சராத்ரம். 268. கீ$_3$தை 14-6.
269. அஷ்டாக்ஷரத்$_4$யாநஶ்லோகம்.



[அடியார் துன்பத்தைப் போக்கும் இடது திருவடியை நீட்டி, வலது திருவடியை மடக்கி, வலது கையை (வலது) முழங்காலில் பொருத்தி, இடது கையை ஆதி$_3$ஶேஷன் மேல் வைத்து, பின்னுள்ள இரண்டு கைகளால் விரோதி$_4$களை நிரஸிக்கும் ஶங்க$_2$சக்ரங்களை த$_4$ரித்து, தே$_3$விமார், (கௌஸ்துப$_4$ம் முதலான) ஆப$_4$ரணங்கள் முதலியவற்றுல் ஸேவிக்கப்பெற்றவனுய் விளங்கும் வைகுண்ட$_2$நாத$_2$ன் உலகிற்கு ஸுக$_2$த்தை அளிப்பானுக.]

270. யத்ர தூ$_4$மஸ் தத்ராக்$_3$நி:

[எங்கு புகையுள்ளதோ அங்கு நெருப்பிருக்கும்.]

271. தத்$_3$ விஷ்ணோ: பரமம் பத$_3$ம் ஸதா$_3$ பஶ்யந்தி ஸூரய:

[விஷ்ணுவினுடையதான அந்தப் பரமபத$_3$த்தை நித்ய ஸூரிகள் எப்போதும் காண்கின்றனர்.]

272. பஶ்யந்தி ச ஸதா$_3$ தே$_3$வம் நேத்ரைர் ஜ்ஞாநேந

[அறிவாகிற கண்களாலே தே$_3$வனை எப்போதும் காண்கின்றனர்.]

273. அஜாயமாநோ ப$_3$ஹுதா$_4$ விஜாயதே

[பிறப்பற்றவனுயினும் பலபடியாகப் பிறக்கிருன் பரமபுருஷன்.]

274. ப$_3$ஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந

[அர்ஜுனு! எனக்கும் உனக்கும் பல ஜன்மங்கள் கழிந்தன.]

275. யஸ்ய தி$_3$வ்யம் ஹி தத்$_3$ ரூபம் ஹீயதே வர்த்த$_4$தே ந ச

[எவனுடைய அந்த தி$_3$வ்யரூபமானது குறைவதும் வளர்வதுமில்லையோ...]

270. தார்க்கிகவாக்யம். 271. ஸாமவேத$_3$ம் 3-18-2-4; ருக்-அஷ்டக 1-2-7. 273. பு-ஸூ 2-4. 274. கீ$_3$தை 4-5.

**276. அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூ4தாநாமீஶ்வரோऽபி ஸந்।**
**ப்ரக்ருதிம் ஸ்வாமதி4ஷ்ட2ாய ஸம்ப4வாம்யாத்மமாயயா ॥**

[பிறப்பற்றவனையும், அழிவற்றவனையும், ஸர்வேஶ்வரனையு மிருந்தபோதிலும், என்னுடைய ஸங்கல்பத்தால் என் ஸ்வப4ாவத்துடன் கூடியே அவதரிக்கிறேன்.]

**277. ஸ ஹி தே3வைருதீ3ர்ணஸ்ய ராவணஸ்ய வத4ார்த்தி2பி4:।**
**அர்த்தி2தோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணு: ஸநாதந:॥**

[கொழுத்தவனான ராவணனுடைய வத4த்தை விரும்பும் தே3வர்களால் பிரார்த்திக்கப்பட்டவரும் பழைமையானவரு மான விஷ்ணு மனுஷ்ய லோகத்தில் ராமனாகப் பிறந்தார்.]

**278. கிமாத்மிகா ப4க3வதோ வ்யக்தி:?। யதா3த்மகோ ப4க3வாந்।**
**கிமாத்மகோ ப4க3வாந்?। ஜ்ஞாநாத்மகோ ப4க3வாந் ॥**

[ப4க3வானுடைய திருமேனி எத்தாலானது? ப4க3வான் எவ்வுருவாயிருக்கிறானோ அத்தாலானது. ப4க3வான் எவ் வுருவாயிருக்கிறான்? ஞானமயனாயிருக்கிறான் ப4க3வான்.]

**279. நீலதோயத3மத்4யஸ்த2ா வித்3யுல்லேகே2வ ப4ாஸ்வரா**

[நீலமேக4ங்கொண்ட மின்னல் போல் ஒளிவிடுவது (திருமேனி)]

**280. தம் த்3ருஷ்ட்வா தே தத3ா தே3வா: ஶங்க2சக்ரக3தா3த4ரம்।**
**அபூர்வ ரூபஸம்ஸ்தா2நம் தேஜஸாம் ராஶிமூர்ஜிதம் ॥**

[ஶங்க2சக்ரக3தா3த4ரனாய், அபூர்வமான திருமேனியமைப் பையுடையவனாய், உறுதியானவனாய், தேஜோராஶியான அந்த ப4க3வானைக் கண்ட தே3வர்கள் (துதிக்கத் தொடங்கினர்.)]

**281. ஸ்தோ-ர-36.**

---

276. கீ3தை 4-6. 277. ரா-அ 1-7. 278. பாஞ்சராத்ரம்.
279. தை-நா-11. 280. வி-பு 1.9-67.



**282. ஸ்வோசித விவித4 விசித்ராநந்தாஶ்சர்ய நித்ய நிரவத்3ய நிரதிஶயஸுக3ந்த4 நிரதிஶய ஸுக2ஸ்பர்ஶ நிரதி-ஶயௌஜ்ஜ்வல்ய கிரீட மகுட சூட3ாவதம்ஸ மகரகுண்ட3ல க்3ரைவேயக ஹார கேயூர கடக ஸ்ரீவத்ஸ கௌஸ்துப4 முக்தாத3ாமோத3ரப3ந்த4ந பீதாம்ப3ர காஞ்சிகு3ண நூபுராத்3யபரிமித தி3வ்யபூ4ஷண!**

[தனக்குத் தகுந்ததாய், விதவிதமானதாய், விசித்ரமானதாய், அளவற்ற ஆச்சரியத்தை அளிப்பதாய், நித்யமாய், தோ3ஷமற்றதாய், ஒப்பற்ற நறுமணத்தையும், நல்ல ஸ்பர்ஶத்தையும், ஒளியையுமுடையதான கிரீடம், மகுடம், சூட3ாவதம்ஸம், மகரகுண்ட3லங்கள், கழுத்தணி, ஹாரம், தோள்வளை, கடகம், ஸ்ரீவத்ஸம், கௌஸ்துப4ம், முத்து வடம், உத3ரப3ந்த4னம், பீதாம்ப3ரம், அரைநாண், சிலம்பு முதலிய கணக்கற்ற தி3வ்யாப4ரணங்களையுடையவனே!]

**283. ஏஷ ப்3ரஹ்ம ப்ரவிஷ்டோऽஸ்மி க்3ரீஷ்மே ஶீதமிவ ஹ்ரத3ம்।**
**ஶாம்யாமி பரிநிர்வாமி ஸுக2ம் மாமேதி கேவலம் ॥**

[கோடையில் குளிர்ந்த குளத்தில் குடைந்தாடுவதுபோல், இந்த ப்3ரஹ்மத்தினுள் குடைந்தாடுகிறேன். அதனால் ஶாந்தனாகிறேன்; தாபம் ஆறினவனாகிறேன்; ஸுக2த் தையே அடைகிறேன்.]

**284. க்வ யௌவநோந்முகீ2பூ4த ஸுகுமாரதநுர் ஹரி:।**
**க்வ வஜ்ரகடி2நாபே4ாக3 ஶரீரோऽயம் மஹாஸுர:॥**

[யௌவனத்தை நோக்கிநிற்கும் ஸௌகுமார்யத்துடன் கூடிய தே3ஹத்தையுடைய கண்ணனெங்கே? வஜ்ரம்போல் கடி2னமான ஶரீரத்தையுடைய இவ்வஸுரனெங்கே?]

**285. ஸர்வக3ந்த4ஸ் ஸர்வரஸ:**

[(பரமாத்மா) எல்லா க3ந்த4ங்களையுமுடையவன்; எல்லா ரஸங்களையுமுடையவன்.]

---

282. ஶரணாக3திக3த்3யம்-5. 283. ப4ார-மோக்ஷ 4-50.
284. வி-பு 5-20-60. 285. சா2ந் 3-14-2.

286. ரங்க₃ப₄ர்த்துரபி லோசநசர்ச்சாம்
ஸாஹஸாவலிஷு லேக₂யமாநம் |
புஷ்பஹாஸ இதி நாம து₃ஹாநம்
ஸௌகுமார்ய மதிவாங்மநஸம் ந: ||

[(தன்மேல்) கண்கள் படுவதையும் ஸாஹஸ காரியங்களின் வரிசைகளிலே எழுதும்படி செய்வதும், 'புஷ்பஹாஸ:' என்கிற திருநாமத்தை விளைவிப்பதுமான பெரியபெருமாளுடைய ஸௌகுமார்யம் (மென்மை) நம்முடைய வாக்குக்கும், மனஸ்ஸுக்கும் எட்டாதது.]

287. ஶ்லோகமும் பொருளும் மூலத்திலேயே காண்க.

288. யுவாகுமார:

[யௌவனத்தையுடையவனாகவும், சிறிது குமாரனாகவும் இருப்பவன். (யுவா அகுமார: என்று பத₃ச்சே₂த₃ம். 'அகுமார:' என்றவிடத்திலுள்ள 'நஞ்' ஈஷத் (சிறிது) என்னும் அர்த்த₂த்தில் பிரயோகி₃க்கப்பட்டுள்ளது)]

289. ஸமஸ்தகல்யாணகு₃ணாத்மகோऽஸௌ
ஸ்வஶக்திலேஶாத்₃த்₄ருதபூ₄தஸர்க்க₃: |
இச்ச₂ாக்₃ருஹீதாபி₄மதோருதே₃ஹஸ்
ஸம்ஸாதி₄தாஶேஷஜக₃த்₃தி₄தோऽஸௌ ||

[இந்த ப₄க₃வான் ஸகலகல்யாணகு₃ணங்களையும் இயற்கையாகவே உடையவன்; தன்னுடைய ஶக்தியில் ஒரு சிறிய பகுதியினாலேயே எல்லாப் பொருள்களையும் த₄ரிப்பவன். இச்சை₂யினாலேயே எடுக்கப்பட்டவையும், இஷ்டமான வையுமான பல தே₃ஹங்களை உடையவன்; இவன் எல்லா ஜக₃த்துக்கும் நன்மையைச் செய்பவன்.]

290. புருஷம் க்ருஷ்ணபிங்க₃ளம்

[கறுப்பும், மஞ்சளும் கலந்த உருவையுடைய புருஷன்.]

---

286. ர-ஸ்த 1-88. 287. ர-ஸ்த 1-89. 288. ருக்-அஷ்டக 2-8-25.
289. வி-பு 6-5-84. 290. தை-நா-12.



291. கா த்வந்யா த்வாம் ருதே தே₃வி ஸர்வயஜ்ஞமயம் வபு: |
அத்₄யாஸ்தே தே₃வதே₃வஸ்ய யோகி₃சிந்த்யம் க₃தா₃ப்₄ருத: ||

[ஹே தே₃வி! க₃தை₃யை த₄ரித்தனும், தே₃வதே₃வனுமான எம்பெருமானுடைய — யோகி₃களால் நினைக்கத்தக்கதும், ஸர்வயஜ்ஞமயமுமான ஶரீரத்தில் உன்னைத் தவிர வேறு எவள் இருக்கிறாள்?]

292. த்₄யேயஸ்ஸதா₃ ஸவித்ருமண்ட₃லமத்₄யவர்த்தீ
நாராயணஸ் ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்ட: |
கேயூரவாந் மகரகுண்ட₃லவாந் கிரீடீ
ஹாரீ ஹிரண்மயவபுர் த்₄ருதஶங்க₂சக்ர: ||

[ஸூர்யமண்ட₃லத்தின் நடுவிலிருப்பவனும், கமலாஸனத்தில் வீற்றிருப்பவனும், தோள்வளை, மகரகுண்ட₃லம், கிரீடம், ஹாரம், இவைகளை உடையவனும், ஸுவர்ணமயமான ஶரீரத்தை உடையவனும், ஶங்க₂சக்ரங்களை த₄ரித்தவனுமான நாராயணன் எப்போதும் தியானிக்கத்தக்கவன்.]

293. கிரீடகுண்ட₃லத₄ரம் மித்ராணாமப₄யப்ரத₃ம்

[கிரீடகுண்ட₃லங்களை த₄ரித்திருப்பவனும், நண்பர்களுக்கு அப₄யமளிப்பவனுமான (ப₄க₃வான்).]

294. ஸதா₃ த்₄யேயம்

[எப்போதும் நினைக்கத்தக்கது.]

295. ஜந்ம கர்ம ச மே தி₃வ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத: |
த்யக்த்வா தே₃ஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந ||

[அர்ஜுனா! என்னுடைய அப்ராக்ருதமான பிறப்பையும் சேஷ்டிதங்களையும் எவன் இப்படி உண்மையாக அறிகிறானோ, அவன் தே₃ஹத்தை விட்டு மறு ஜன்மம் அடையான்; என்னை அடைகிறான்.]

---

291. வி-பு 1-9-122. 292. நாரஸிம்ஹபுராணம்.
295. கீ₃தை 4-9.

295*. பஶ்ய மே பார்த்த2 ரூபாணி ஶதஶோऽத2 ஸஹஸ்ரஶ: ॥

[அர்ஜுனா! என்னுடைய நூறாயிரக்கணக்கான உருவங்களைக் காண்பாயாக.]

296. க்ரீட3தோ பா3லகஸ்யேவ சேஷ்டாம் தஸ்ய நிஶாமய

[சிறுவனைப்போலே விளையாடும் அந்த ப4க3வானுடைய (ஜக3த்ஸ்ருஷ்ட்யாதி3களாகிற) செயல்களைக் கேட்பாயாக.]

297. நாகாரணாத் காரணாத்3 வா காரணாகாரணாந்ந ச ।
ஶரீரக்3ரஹணம் வ்யாபிந் த4ர்மத்ராணாய கேவலம் ॥

[ஸர்வவ்யாபியே! நீ ஶரீரத்துடன் பிறப்பது—ஸுக2த்தின் பொருட்டாவது, து3:க்க2த்தின் பொருட்டாவது, ஸுக2 து3:க்க2ச் சேர்க்கையின் பொருட்டாவது ஆவதில்லை. த4ர்ம ரக்ஷணத்திற்காகவே உன் பிறப்பு ஏற்பட்டிருக்கிறது]

298. 20-வது ப்ரமாணத்தைப் பார்க்கவும்.

299. பரமாத்மா பரோ யோऽஸௌ நாராயணஸமாஹ்வய: ।
தஸ்யாநபாயிநீ ஶக்திர் தே3வீ தத்3த4ர்மத4ர்மிணீ ॥

[நாராயணன் என்னும் பெயரையுடையவனாய், மேலானவனாயுள்ள பரமாத்மா எவனொருவனிருக்கிறானோ, அவனை விட்டுப் பிரியாத ஶக்தியாகவும், அவனுடைய கு3ணங்களையே தன்னிடம் உடையவளாகவுமிருப்பவள் லக்ஷ்மீ தே3வி.]

299*. 126-வது ப்ரமாணம் காண்க.

300. அஹந்தா ப்3ரஹ்மணஸ் தஸ்ய ஸாऽஹமஸ்மி ஸநாதநீ ।
ஆத்மா ஸ ஸர்வபூ4தாநாமஹம்பூ4தோ ஹரி: ஸ்ம்ருத: ॥
அஹந்தயா விநாऽஹம் ஹி நிருபாக்2யோ ந ஸித்3த்4யதி ।
அஹமர்த்த2ம் விநாऽஹந்தா நிராத4ாரா ந ஸித்3த்4யதி ॥

295*. கீ3தை 11-5. 296. வி-பு 1-2-18. 297. வி-பு 5-1-50.
299. பாஞ்சராத்ரம். 300. லக்ஷ்மீதந்த்ரம் 2-12&18.



[பழைமையானவளான நான் ப்3ரஹ்மமாகிற அந்த ப4க3வானுக்கு அஹந்தை (நானென்னும் தன்மை) யாயிருக்கிறேன். ஸர்வபூ4தங்கட்கும் ஆத்மாவான ஹரியானவர் அஹம்பூ4தராயிருக்கின்றார். அஹந்தையை விட்டு அஹமர்த்த2மானது பெயரற்றதாய் ஸித்3தி4க்காது. அஹமர்த்த2த்தை விட்டு அஹந்தையானது ஆத4ாரமற்றதாய் ஸித்3தி4க்காது.]

301. 291-வது ப்ரமாணம் காண்க.

302. 188-வது ப்ரமாணம் காண்க.

303. ராஜராஜோऽகி2லஸ்யாஸ்ய விஶ்வஸ்ய பரமேஶ்வர: ।
காந்தஸ்ய தஸ்ய தே3வஸ்ய விஷ்ணோஸ்
ஸத்3கு3ணஶாலிந: ॥

த3யிதாऽஹம் ஸதா3 தே3வீ ஜ்ஞாநாநந்த3மயீ ஸதா3 ।
அநவத்3யாऽநவத்3யாங்கீ3 நித்யம் தத்3த4ர்மத4ர்மிணீ ॥

[ராஜராஜனாய், இவ்வுலகிற்கெல்லாம் பரமேஶ்வரனாயிருப்பவன் ப4க3வான். காந்தனாய், நற்குணங்கள் பொருந்தியவனாய், தே3வனான அந்த விஷ்ணுவிற்கு நான் தே3வியாய், எப்போதும் பிரியையாய், ஞானாநந்த3மயியாய், எப்போதும் குற்றமற்ற கு3ணங்களையும், தே3ஹத்தையுமுடையவளாய், எப்போதும் அவனுடைய த4ர்மங்களையே த4ர்மமாக உடையவளாயிருப்பவள்.]

304. 227-வது ப்ரமாணம் காண்க.

305. தத்ர தி3வ்யவபு: ஶ்ரீமாந் தே3வதே3வோ ஜநார்த்த3ந: ।
ஆஸ்தே நாராயண: ஶ்ரீமாந் வாஸுதே3வஸ் ஸநாதந: ॥

[அங்கு தே3வதே3வனாய், ஜனார்த்த3னன் வாஸுதே3வன் என்னும் பெயர்களை உடையவனாய், தி3வ்யமங்க3ள விக்3ரஹத்தையுடையவனாய், அழகியவனாய், பிராட்டியுடன் கூடியவனான நாராயணன் எழுந்தருளியிருக்கிறான்.]

303. லக்ஷ்மீதந்த்ரம் 17-30&31.

306. 81-வது ப்ரமாணம் காண்க.

307. ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: ।
நாக3பர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாக3தோ மது4ராம் புரீம் ॥

[பாற்கடலில் பள்ளிகொண்டவனான இந்த ஸ்ரீமந்நாராயணனே பைந்நாகப்பாயை விட்டு மது4ராபுரிக்கு வந்திருக்கிறான்.]

308. 60-வது ப்ரமாணம் பார்க்க.

309. வ்யூஹேஷு சைவ ஸர்வேஷு விப4வேஷு ச ஸர்வஶ: ।
தத2ா வ்யூஹீப4வத்யேஷா மம சைவாநபாயிநீ ॥

[எல்லா வியூஹங்களிலும், எல்லா விப4வங்களிலும், என்னைவிட்டுப் பிரியாதவளாய், இப்பிராட்டியும் அவதாரமெடுக்கிறாள்.]

310. தைஸ்தைரநுகு3ணைர் ப4ாவைர் யாஹம் தே3வஸ்ய
ஶார்ங்கி3ண: ।
கரோமி ஸகலம் க்ருத்யம் ஸர்வப4ாவாநுக3ாமிநீ ॥

[பொருத்தமான அந்தந்தத் தன்மைகளோடு கூடி, நான் ஶார்ங்க3மென்னும் வில்லாண்ட தே3வனை எல்லாத் தன்மைகளிலும் பின்தொடர்ந்தவளாய், எல்லாக் காரியங்களையும் செய்கிறேன்.]

311. கு3ணைர் விலாஸை ரூபைஶ்ச
ஸ்வாத்மநா வாऽऽத்மநீஶ்வரம் ।
நியச்ச2ந்தீம் அக2ண்ட3ாண்ட3
நியந்த்ரீஞ்ச ஸ்தும: ஶ்ரியம் ॥

[கு3ணங்களாலும், செயல்களாலும், ரூபங்களாலும், தன்னுடைய ஸ்வரூபத்தாலும், தன்னிடத்தில் ஈஶ்வரனை அடக்கிக்கொண்டிருப்பவளாய், எல்லா அண்ட3ங்களையும் நியமிப்பவளான ஸ்ரீ தே3வியைத் துதிக்கிறோம்.]

307. ஹரிவம்ஶம் 113-62. 309. பாஞ்சராத்ரம்.
310. லக்ஷ்மீதந்த்ரம் 17-4. 311 பாஞ்சராத்ரம்.



311*. ஸ்வரூபம் ஸ்வாதந்த்ர்யம் ப4க3வத இத3ம் சந்த்3ரவத3நே ।
த்வத3ாஶ்லேஷோத்கர்ஷாத் ப4வதி க2லு
நிஷ்கர்ஷஸமயே ।
த்வமாஹீர் மாத: ஸ்ரீ: கமிதுரித3மித்த2ந்த்வவிப4வஸ்
தத3ந்தர்ப்ப4ாவாத் த்வாம் ந ப்ருத2க3பி4த4த்தே
ஶ்ருதிரபி ॥

[சந்த்3ரன்போன்ற திருமுகத்தையுடைய தாயே மஹாலக்ஷ்மி! பரதத்வநிர்ணய காலத்தில், ப4க3வானுடைய இந்த ஸ்வரூபமும் ஸ்வாதந்த்ர்யமும் உன்னுடைய ஆலிங்க3னப் பெருமையால் உண்டாவதன்றோ. உன் கணவனுடைய ஸ்வரூபத்தையும், ஸ்வப4ாவத்தையும் விளக்கும் அந்தரங்க3 விஶேஷணமாக ஆகிறாய் நீ. வேத3மும் — (அவனுடைய ஸ்வரூபநிரூபகபூ4தையாக) அவனுடன் நீ ஒன்றிநிற்கையால் உன்னைத் தனித்துப் படிப்பதில்லை.]

312. 174-வது ப்ரமாணம் காண்க.

313. ப்ரஶகநப3லஜ்யோதிர் ஜ்ஞாநைஶ்வரீவிஜயப்ரத2ா-
ப்ரணதவரண ப்ரேமக்ஷேமங்கரத்வபுரஸ்ஸரா: ।
அபி பரிமள: காந்திர் லாவண்யமர்ச்சிரிதீந்தி3ரே !
தவ ப4க3வதஶ் சைதே ஸாத4ாரணா கு3ணராஶய: ॥

[பிராட்டியே! சக்தி, ப3லம், தேஜஸ், ஞானம், ஐஶ்வர்யம், விஜயகீர்த்தி, ஆஶ்ரிதர்களை வஶீகரித்தல், (அவர்களிடம்) அன்பு, ( அவர்கட்கு ) நன்மைசெய்தல் முதலான ஆத்ம கு3ணங்களும், நறுமணம், அழகு, லாவண்யம் (ஸமுத3ாய ஶோபை4), ஒளி என்னும் தே3ஹகு3ணங்களுமாகிய இந்த கு3ணஸமூஹங்கள் உனக்கும், ப4க3வானுக்கும் பொதுவாயுள்ளவை.]

314. அந்யேऽபி யௌவநமுக2ா யுவயோஸ் ஸமாநா:
ஸ்ரீரங்க3மங்க3ளவிஜ்ரும்ப4ணவைஜயந்தி! ।
தஸ்மிம்ஸ்தவ த்வயி ச தஸ்ய பரஸ்பரேண
விஸ்தீர்ய த3ர்ப்பண இவ ப்ரசுரம் ஸ்வத3ந்தே ॥

 311*. ஸ்ரீகு3ண-28. 313. ஸ்ரீகு3ண-32. 314. ஸ்ரீகு3ண-33.

[திருவரங்க3த்தின் மங்க3ளங்களைக் காட்டும் கொடிபோன்ற பிராட்டியே! யௌவனம் முதலிய மற்றும் சில கு3ணங்களும் உங்களிருவர்க்கும் பொதுவாயுள்ளன. உம்முடைய கு3ணங்கள் அவரிடமும், அவருடையவை உம்மிடமும் கண்ணாடியிற்போல் பரஸ்பரம் பிரதிப2லித்து மிகவும் ரஸிக்கத்தக்கவைகளாகின்றன.]

315. யுவத்வாதௌ3 துல்யேऽப்யபரவஶதா ஶத்ருஶமந-
ஸ்தி2ரத்வாதீ3ந் க்ருத்வா ப4க3வதி கு3ணாந்
பும்ஸ்த்வஸுலப4ாந் ।
த்வயி ஸ்த்ரீத்வைகாந்தாந் ம்ரதி3ம பதிபாரார்த்2ய கருணா
க்ஷமாதீ3ந் வா பே4ாக்தும் ப4வதி யுவயோராத்மநி பி4தா3 ॥

[யௌவனம் முதலிய கு3ணங்கள் ஸமானமாயிருந்தபோதிலும், ஸ்வாதந்த்ர்யம், ஶத்ருநிக்3ரஹம், நிலைகுலையாமை முதலான புருஷனுக்குத் தகுந்த கு3ணங்களை ப4க3வானிடமும், பெண்களுக்கேயுரிய மென்மை, பதிபாரதந்த்ர்யம், த3யை, பொறுமை முதலானவைகளை உன்னிடத்திலும் வைத்து அனுப4விப்பதற்கு, உங்களுடைய ஸ்வரூப ரூபங்களில் பே4த3மும் ஸித்3தி4க்கிறது.]

316. தத்ர ஸ்ரக்ஸ்பர்ஶக3ந்த4ம் ஸ்பு2ரது3பரிப2ணரத்ந-
ரோசிர்விதாநம்
விஸ்தீர்யாநந்தபே4ாக3ம் தது3பரி நயதா
விஶ்வமேகாதி4பத்யம் ।
தைஸ்தை: காந்தேந ஶாந்தோதி3தகு3ண-
விப4வைரர்ஹதா த்வாமஸங்க்2யை: ।
அந்யோந்யாத்3வைத நிஷ்ட2ாக4நரஸக3ஹநாந்
தே3வி பு3த்4நாஸி பே4ாக3ாந் ॥

[தே3வியே! அந்தத் திருமாமணி மண்டபத்தில் புஷ்பமாலையினுடையதுபோன்ற ஸ்பர்ஶ க3ந்த4ங்களையுடையதாய், பிரகாசியாநிற்கும் மேலுள்ள படங்களிலுள்ள ரத்னங்களின் காந்திகளாகிற மேற்கட்டியையுடையதாயிருக்கும் ஆதி3ஶேஷனது உடலாகிற பாயை விரித்து, அதன்

315. ஸ்ரீகு3ண-34. 316. ஸ்ரீகு3ண-25.



மேல் எழுந்தருளியிருந்து உப4யவிபூ4தியையும் ஏகசக்ராதி4பத்யம் செய்பவரும், எண்ணிறந்த அந்தந்த ஶாந்தோதி3தாவஸ்தை2யின் கு3ணாதிஶயங்களினால் உமக்குத் தகுந்தவராயிருப்பவருமான உம்முடைய வல்லப4னுடன் கூடி, பரஸ்பரம் ஒற்றுமை நிலையினால் மிகுந்த ரஸம் நிறைந்திருக்கும் அநுப4வங்களை அனுப4விப்பிக்கிறீர்.]

317. ஸ்க2லித கடகமால்யைர் தே3ார்ப்பி4ரப்3தி4ம் முராரே:
ப4க3வதி த3தி4மாத2ம் மத்2நத: ஶ்ராந்திஶாந்த்யை ।
ப்4ரமத3ம்ருததரங்க3ாவர்த்தத: ப்ராது3ராஸீ:
ஸ்மிதநயந ஸுதா4பி4ஸ் ஸிஞ்சதீ சந்த்3ரிகேவ ॥

[பிராட்டியே! அலையாநின்ற தோள்வளைகளையும் மாலைகளையுமுடைய கைகளாலே பாற்கடலைத் தயிர் கடைவதுபோல் கடைகின்ற முராரியினுடைய சிரமம் நீங்குவதற்காக, புன்சிரிப்பு, கடாக்ஷங்கள், இவைகளாகிற அம்ருதங்களாலே நனைத்துக்கொண்டு, சந்திரனுடைய நிலவுபோல், சுழன்று வருகிற அமுத அலைச்சுழல்களிலிருந்து நீர் தோன்றினீர்.]

318. யதி3 மநுஜதிரஶ்சாம் லீலயா துல்யவ்ருத்தே-
ரநுஜநுரநுரூபா தே3வி நாவாதரிஷ்ய: ।
அஸரஸமப4விஷ்யந் நர்ம நாத2ஸ்ய மாதர்
த3ரத3ளத3ாவிந்தே3ாத3ந்த காந்தாயதாக்ஷி ॥

[சிறிது மலர்ந்த செந்தாமரையின் உள்ளிதழ்போல் அழகிய திருக்கண்களையுடைய பிராட்டியே! லீலையின் பொருட்டு (தே3வ) மனுஷ்ய திர்யக் (ஸ்த2ாவரங்)களுடன் ஒருபடிப்பட்டவனாய் அவதரிக்கும் ஸ்ரீரங்க3நாத2னுடைய அவதாரந்தோறும் அநுரூபையாக நீர் அவதரியாமலிருந்திருப்பீராகில், அந்த நாத2னுடைய விளையாட்டானது சுவையற்றதாகியிருக்கும்.]

319. அநுஜநுரநுரூபரூப சேஷ்டா
ந யதி3 ஸமாக3மமிந்தி3ராऽகரிஷ்யத் ।
அஸரஸமத2வாऽப்ரியம்ப4விஷ்ணு
த்4ருவமகரிஷ்யத ரங்க3ராஜநர்ம ॥

317. ஸ்ரீகு3ண-49. 318. ஸ்ரீகு3ண-48. 319. ர-ஸ்த 2-49.

[ரங்க3நாத2ரே! பிராட்டியானவள் (தேவரீருடைய) அவதாரந்தோறும் தேவரீர்க்கு ஒத்த உருவத்தையும் லீலைகளையும் உடையவளாய்க்கொண்டு சேர்ந்து அவதாரம் செய்யாதிருந்தாளாகில், உம்முடைய (அவதாரமாகிற) விளையாட்டைச் சுவையற்றதாகவோ, அல்லது வெறுக்கத்தக்கதாகவோ செய்திருப்பாள்; இது நிச்சயம்.]

320. 64-வது ப்ரமாணம் காண்க.

320*. 199-வது ப்ரமாணம் காண்க.

**321. ப்ரளயஸமயஸுப்தம் ஸ்வம் ஶரீரைகதே3ஶம்**
**வரத3 சித3சிதா3க்2யம் ஸ்வேச்ச2யா விஸ்த்ருணாந: ।**
**க2சிதமிவ கலாபம் சித்ரமாதத்ய தூ4ந்வந்**
**அநுஶிகி2நி ஶிகீ2வ க்ரீட3ஸி ஶ்ரீஸமக்ஷம் ॥**

[வரந்தரும் பெருமாளே! பிரளயகாலத்தில் ஒடுங்கிக்கிடக்கும் தன் திருமேனியின் ஒரு பகுதியைத் தன் ஸங்கல்பத்தினால் ஜக3த்3ரூபமாகப் பரப்பாநின்றுகொண்டு, மயிற்பேடையின் எதிரே பல வர்ணங்களையுடைய தோகையை ஆகாசத்தை அளாவியதுபோல் விரித்து உதறுகின்ற ஆண்மயில்போலப் பிராட்டியின் முன்னிலையில் தேவரீர் விளையாடாநின்றீர்.]

**322. ஆத்மந்யாத்மா வபுஷி ச வபுர் வைப4வைர் வைப4வஞ்சே-**
**த்யாகாரைஸ்தைரநுகு3ணதயா ஸர்வபா4வாநுயாதா ।**
**இச்சா2ரூபாண்யபி ப4க3வதஸ் ஸ்வாத3யந்த்யாத்தரூபா**
**தா3ரீகுர்யாந்நஹி மது4ரதாம் து3க்3த4ஸிந்தோ4ஸ்**
**தரங்கா3த் ॥**

[ப4க3வத்ஸ்வரூபத்தில் தன் ஸ்வரூபமும், (அவனுடைய) தே3ஹத்தில் (தன்) தே3ஹமும், (அவனுடைய) விபூ4திகளில் தன் வைப4வமும் அடங்கும்படி இப்படிப்பட்ட ஆகாரங்களாலே அவனுக்குத் தகுந்தவளாய், அவனுடைய எல்லா நிலைகளையும் பின் தொடருமவளாய், ப4க3வானுடைய இச்சை2யினால் எடுக்கப்பட்ட அவதாரரூபங்களையும், (அவற்றுக்குப் பொருந்திய) உருவங்களையெடுப்பதன்மூலம் இனிக்கச் செய்கிறாள் பிராட்டி; பாற்கடலின் அலைகளிலிருந்து அதன் இனிமையைப் பிரிக்கமுடியாமலிருப்பதுபோல் பிராட்டியையும் எம்பெருமானிடமிருந்து (எவனும்) பிரிக்கமுடியாதன்றோ.]

321. ர-ஸ்த 2·44.



**323. வாலாக்3ர ஶதபா4க3ஸ்ய ஶததா4 கல்பிதஸ்ய ச ।**
**பா4கோ3 ஜீவஸ்ஸ விஜ்ஞேயஸ் ஸ சாநந்த்யாய கல்பதே ॥**

[தா4ன்ய நுனியின் நூற்றிலொரு பங்கை நூறு கூறிட்டதில் ஒரு பகுதியே ஜீவனென்று அறியத்தக்கவன். அவன் (முக்தியடையும்போது) (ஞானத்தின் மூலம்) அளவற்றவனாகிறான்.]

**324. ஏதத் ஜ்ஞேயம் நித்யமேவாத்மஸம்ஸ்த2ம்**
**நாத: பரம் வேதி3தவ்யம் ஹி இஞ்சித் ।**
**போ4க்தா போ4க்3யம் ப்ரேரிதாரஞ்ச மத்வா**
**ஸர்வம் ப்ரோக்தம் த்ரிவித4ம் ப்3ரஹ்மமேதத் ॥**

[ஆத்மாவினுள் அந்தர்யாமியாயிருக்கும் இந்தப் பரப்3ரஹ்மமானது என்றும் அறியத்தகுந்தது. இதைக்காட்டிலும் அறியவேண்டியது வேறொன்றில்லை. அனுப4விப்பவனான ஜீவனுக்கு அந்தர்யாமியாகவும், அனுப4விக்கப்படும் அசித்துக்கு அந்தர்யாமியாகவும், நியமிப்பவனான தன்னுடைய ஸ்வரூபத்தோடு கூடியவனாகவும், ஆக இப்படி ப்3ரஹ்மம் மூன்று வித4மாகச் சொல்லப்படுகிறது.]

**325 & 326. க்ஷரம் ப்ரதா4நமம்ருதாக்ஷரம் ஹர:**
**க்ஷராத்மாநாவீஶதே தே3வ ஏக:**

[க்ஷரம் எனப்படுவது மூலப்ரக்ருதியாகும்; அழிவற்றவனாயிருக்கையால் அக்ஷரனெனப்படுமவன் போ4க்தாவான ஜீவனாவன். அசித்தையும் ஜீவனையும் ஒரு தே3வன் நியமிக்கிறான்.]

323. ஶ்வே 5-9. 324. ஶ்வே 1-12. 325 & 326. ஶ்வே 1-10.

327. ந தஸ்ய கார்யம் கரணம் ச வித்3யதே
ந தத்ஸமஶ்சாப்4யதி4கஶ்ச த்3ருஶ்யதே ।
பராஸ்ய ஶக்திர் விவிதை4வ ஶ்ரூயதே
ஸ்வாப4ாவிகீ ஜ்ஞாநப3லக்ரியா ச ॥

[அவனுக்கு (ப்ராக்ருதமான) ஶரீரமும் இந்திரியங்களு மில்லை; அவனுக்கு ஒப்பாரும் மிக்காரும் காணப்படுவதில்லை. இவனுடைய மேலான ஶக்தியும், இயற்கையான ஜ்ஞான ப3லக்ரியைகளும் விதவிதமாக ஓதப்படுகின்றன.]

328. ஏஷோऽணுராத்மா சேதஸா வேதி3தவ்ய:

[அணுவாகிற இந்த ஜீவாத்மா மனத்தாலே அறியத் தகுந்தவன்.]

329. த்ரஸரேணுப்ரமாணாஸ்தே ரஶ்மிகோடிவிபூ4ஷிதா:

[(ஞானமயமான) கோடிக்கணக்கான கிரணங்களையுடைய அந்த ஜீவர்கள் த்ரஸரேணுவைப்போல் அளவுள்ளவர்கள்.]

330. ப்ரதீ3பவத்3ாவேஶஸ் தத2ா ஹி த3ர்ஶயதி

[விளக்கைப்போல் (தே3ஶாந்தரத்திலும்) வியாபித்திருத்தல் ஜீவனுக்கும் (அறிவினால்) முடியும். ('வாலாக்3ர' என்று தொடங்கும்) ஶ்ருதியும் அப்படியே காண்பிக்கிறதன்றோ]

331. க்ஷீரோத3ாச் ச்2ரீஸ் ஸமுத்பந்நா ஶ்ரூயதேऽம்ருதமந்த2நே।
ப்4ருகே3ா: க்2யாத்யாம் ஸமுத்பந்நேத்யேதத3ாஹ
கத2ம் ப4வாந் ॥

[அம்ருதங்கடைந்த காலத்தில் பாற்கடலிலிருந்து ஸ்ரீதே3வி யுண்டானதாகச் சொல்லப்படுகிறது. ப்4ருகு3விற்கு க்2யாதி என்னும் மனைவியிடம் உண்டானதாகத் தாங்கள் எப்படிச் சொல்லுகிறீர்கள்?.]

332. 60-வது ப்ரமாணம் காண்க.

327. ஶ்வே 6.8. 328. முண்ட3 3-1-9. 330. ப்3ர-ஸூ 4-4-15.
331. வி-பு 1-8-16.



333. ஸௌம்யாஸௌம்யைர் ஜக3த்3ரூபைஸ் த்வயைதத்
தே3வி பூரிதம்

[தே3வியே! அழகியதும், க்ரூரமானதுமான உருவங்களால் இவ்வுலகமானது உன்னால் வியாபிக்கப்பட்டுள்ளது.]

334. 252-வது ப்ரமாணம் காண்க.

335. தே3வதிர்யங் மநுஷ்யேஷு புந்நாமா ப4க3வாந் ஹரி:।
ஸ்த்ரீநாம்நீ லக்ஷ்மீர் மைத்ரேய! நாநயோர் வித்3யதே
பரம் ॥

[மைத்ரேயரே! தே3வர், திர்யக் (ஊர்வன), மனுஷ்யர்கள் ஆகிய ஜீவராசிகளுள் ஆணாயிருப்பது ப4க3வான் ஹரி யின் அம்ஶம் பெற்றது. பெண்ணாயிருப்பது லக்ஷ்மியின் அம்ஶம் பெற்றது. இவ்விருவரைக் காட்டிலும் மேலான தில்லை.]

336. ஈஶாநஸ் ஸர்வவித்3யாநாம் ஈஶ்வரஸ் ஸர்வபூ4தாநாம்

[எல்லா வித்3யைகளுக்கும் ஈஶன்; எல்லா பூ4தங்களுக்கும் ஈஶ்வரன்.]

337. 100-வது ப்ரமாணம் காண்க.

338. அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா

[ஸர்வாந்தர்யாமியான நாராயணன் ஜனங்களை உள் நுழைந்து நியமிக்கிறான்.]

339. ய ஆத்மநி திஷ்ட2ந் ஆத்மநோऽந்தரோ யமாத்மா ந வேத3 யஸ்யாத்மா ஶரீரம் ய ஆத்மாநமந்தரோ யமயதி ஏஷ த ஆத்மா அந்தர்யாம்யம்ருத:

[எவனொருவன் ஆத்மாவில் நின்றுகொண்டும், ஆத்மாவி னுள்ளிருந்தும் விளங்குகிறானோ, எவனை ஆத்மா அறிய வில்லையோ, எவனுக்கு ஆத்மா ஶரீரமோ, எவன் ஆத்மாவை உள்நுழைந்து நியமிக்கிறானோ, அந்தப்

333. வி-பு 1-9-121. 335. வி-பு 1-8-35. 336. தை-நா 44.
338. யஜு-ஆர 3-11-21. 339. ப்3ருஹ 5-7-22.

பரமாத்மாவே, அம்ருதமயனுய், உனக்கும் அந்தர்யாமி யாய் விளங்குமவன்.]

**340. ஸதே3வ ஸோம்யேத3மக்3ர ஆஸீதே3கமேவாத்3விதீயம்**

[குழந்தாய்! ஆதி3யில் ஸத்தாகிற ப்3ரஹ்மமாகவே இவ்வுலகம் இருந்தது. ஒன்ருகவே விளங்கிற்று. இரண்டற்றதாய் விளங்கிற்று. (நிமித்த உபாத3ான ஸஹகாரி காரணங்களாக ப்3ரஹ்மமே இருந்தது என்றபடி.)]

**341. ப்ரக்ருதிஶ்ச ப்ரதிஜ்ஞாத்3ருஷ்டாந்தாநுபரோத4ாத்**

[(ப்3ரஹ்மம்) உபாத3ான காரணமாகவுமாகிறது; (அப்படியிருப்பதாலேயே) ஒன்றையறிந்தால் எல்லாமறிந்ததாகும் என்னும் ப்ரதிஜ்ஞையும், ம்ருத்பிண்ட3க4டாதி3 த்3ருஷ்டாந்தமும் ஒட்டுமாகையால்.]

**342. ஏஷ ம ஆத்மாऽந்தர்ஹ்ருத3யே ஜ்யாயாந் ப்ருதி2வ்யா**
**ஜ்யாயாநந்தரிக்ஷாத் ஜ்யாயாந் தி3வோ ஜ்யாயா-**
**நேப்4யோ லோகேப்4ய:**

[என்னுடைய ஹ்ருத3யத்தினுள்ளிருக்கும் இந்தப் பரமாத்மாவானவன் பூ4மியைக் காட்டிலும், அந்தரிக்ஷத்தைக் காட்டிலும், தே3வலோகத்தைக் காட்டிலும் இவ்வுலகங்களெல்லாவற்றைக் காட்டிலும் பெரியவன்.]

**343. யதோ வா இமாநி பூ4தாநி ஜாயந்தே ।**
**யேந ஜாதாநி ஜீவந்தி । யத் ப்ரயந்த்யபி4ஸம்விஶந்தி ।**
**தத் விஜிஜ்ஞாஸஸ்வ தத் ப்3ரஹ்மேதி ॥**

[எதனிடமிருந்து இந்த பூ4தங்கள் பிறக்கின்றனவோ, உண்டானவை எதனுல் உயிர் வாழ்கின்றனவோ, ப்ரளய காலத்தில் எதனிடம் லயிக்கின்றனவோ அதுவே ப்3ரஹ்மமென்று அதை அறிவாயாக.]

---

340. சா2ந்-உப 6-2-1. 341. ப்3ர-ஸூ 1-4-23.
342. சா2ந்-உப 3-14-3. 343. தை-ப்4ருகு3 1.



**344. ஸர்வம் க2ல்வித3ம் ப்3ரஹ்ம தஜ்ஜலாநிதி ஶாந்த உபாஸீத**

[அந்த ப்3ரஹ்மத்தினிடமிருந்தே பிறக்கையாலும், அதிலேயே லயிக்கையாலும், அதனுலேயே உயிர்வாழ்வதாலும் இவையெல்லாம் ப்3ரஹ்மமன்ருே என்று ஶாந்தனுய் உபாஸிக்கக்கடவன்.]

**345. காரணம் து த்4யேய:**

[காரணவஸ்துவே தியானிக்கத்தக்கது.]

**346. அத2ாதோ ப்3ரஹ்மஜிஜ்ஞாஸா**

[(கர்மவிசாரத்திற்குப்) பிறகு, அக்காரணத்தாலேயே ப்3ரஹ்மவிசாரம் செய்யவேண்டும்.]

**347. ஜந்மாத்3யஸ்ய யத:**

[இவ்வுலகின் பிறப்பு முதலியவை எதனிடமிருந்தோ (அதுவே ப்3ரஹ்மம்).]

**348. ஆலோட்3ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புந: புந: ।**
**இத3மேகம் ஸுநிஷ்பந்நம் த்4யேயோ நாராயண: ஸதா3 ॥**

[எல்லா ஶாஸ்த்ரங்களையும் ஆராய்ந்து மறுபடியும் மறுபடியும் விசாரித்தாலும், 'நாராயணனே எப்போதும் தியானிக்கத்தக்கவன்' என்னும் பொருளே நன்கு தேறிநிற்கும்.]

**349. 292-வது ப்ரமாணம் காண்க.**

**350 & 351. ப்ரயதபாணி: ஶரணமஹம் ப்ரபத்3யே, ஸ்வஸ்தி ஸம்ப3ாதே4ஷ்வப4யம் நோ அஸ்து**

[(ஆகிஞ்சந்யத்தினுல்) ஶுத்3த4மான கையை உடையவனுய் நான் ஶரணமடைகிறேன். மங்க3ளங்களும், இடையூறு ஏற்படும்போது ப4யமின்மையும் எங்களுக்கு உண்டாகட்டும்.]

**352. 258-வது ப்ரமாணம் காண்க.**

---

344. சா2ந்-உப 3-14-1. 345. அத2ர்வஶிகை. 346. ப்3ர-ஸூ 1-1-1
347. ப்3ர-ஸூ 1-1-2. 348. பா4ர-ஆநு 178-11.
350 & 351. போ3த4ாயநக்3ருஹ்ய ஸூத்ரத்தில் ஸ்வஸ்தி ஸூக்தத்தில் எடுக்கப்பட்ட ருக்2வேத3கி2ல மந்த்ரம்.

**353. வாஸுதே3வம் ஜக3த்3யோநிம் நௌமி நாராயணம் ஹரிம்**

[வாஸுதே3வ ஹரி ஶப்3த3வாச்யனாய், ஜக3த்காரணனான நாராயணனைத் துதிக்கிறேன்.]

**354. ரக்ஷிஷ்யதி ஹரி: ஸ்ரீமாநாஶ்ரிதாநிதி நிஶ்சயாத்**

[ஸ்ரீமானான ஹரி அடியார்களைக் காத்தருள்வான் என்னும் நிச்சயத்தினால்...]

**355. நாராயணாய நாத2ாய ஹரயே ஸ்ரீமதே நம:**

[ஹரிஶப்3த3வாச்யனான ஸ்ரீமந் நாராயணனாகிற ஸ்வாமிக்கு நமஸ்காரம்.]

**356. அவித்3யாதோ தே3வே பரிப்3ருட4தயா வா விதி3தயா**
**ஸ்வப4க்தேர் பூ4ம்நா வா ஜக3தி க3திமந்யாமவிது3ஷாம் ।**
**க3திர் க3ம்யஶ்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வய மநோ:**
**ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸ க2லு ப4க3வாந் ஶௌநகமுநி: ॥**

['ப4க3வத்3விஷயத்தில் அறியாமையினாலாவது, நன்றாக அறிந்திருப்பதனாலேயாவது, தன் ப4க்தியின் ஆதி4க்யத்தினாலேயாவது இவ்வுலகில் வேறு உபாயத்தை அறியாதவர்களுக்கு உபாயமும் உபேயமும் இந்த ஹரியே' என்று 'ஜிதந்தே' என்று பெயரையுடைய மந்த்ரத்தின் ரஹஸ்யத்தை ப4க3வான் ஶௌனகமுனி வெளிப்படுத்தினாரன்றோ.]

**357,358&359. 162-வது ப்ரமாணம் காண்க.**

**360. ஸ்வாத3யந்நிஹ ஸர்வேஷாம்**
**த்ரய்யந்தார்த்த2ம் ஸுது3ர்க்3ரஹம் ।**
**ஸ்தோத்ரயாமாஸ யோகீ3ந்த்3ரஸ்**
**தம் வந்தே3 யாமுநாஹ்வயம் ॥**

[அறியவரிதான வேத3ாந்தார்த்த2த்தை அனைவர்க்கும் ரஸிக்கச் செய்துகொண்டு ஸ்தோத்ரம் செய்தருளிய யாமுனமுனிவரைத் துதிக்கிறேன்.]

சது:ஶ்லோகீ வ்யாக்2யான ப்ரமாணத்திரட்டு முற்றிற்று
நாயனாராச்சான்பிள்ளை திருவடிகளே ஶரணம்.

---

356. பட்டர் முக்தகம். 360. ஆளவந்தார் தனியன்.

# சது:ச்லோகீ வ்யாக்யான ப்ரமாணத்திரட்டு அட்டவணை

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஆழ்வாராசார்யர்களின் அருளிச்செயல்களுக்கு
எளிய தமிழ் விரிவுரைகளுடன்
வெளிவரும் சிறந்த

## ஸ்ரீ வைஷ்ணவ மாதப்பத்திரிகை

# ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

வேதம், ஸ்ம்ருதிகள், இதிஹாஸங்கள் முதலியவற்றிலிருந்து ஸ்ரீமந் நாராயணனின் பெருமையை விளக்கும் விஷ்ணுசித்தவிஜயம் என்னும் சிறந்த க்ரந்தமும், தமிழில் கீதா வ்யாக்யானமும், திவ்ய ப்ரபந்தங்களுக்கு எளிய விவரணங்களோடு கூடிய பூர்வாசார்ய வ்யாக்யானங்களும், கு$_3$ருபரம்பராப்ரப$_4$ாவத்தை விளக்கும் (தமிழ் விவரணத்தோடு கூடிய) ப்ரபந்நாம்ருதமும், விசிஷ்டாத்வைத ப்ரகரணக்ரந்தமான விவரண ஸஹித ஶாரீரககாரிகாவளியும், கேள்வி பதில்களும் மற்றும் பல விஷயங்களும் வெளிவருகின்றன.

ஆசிரியர்:-

**ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,**
அட்வகேட்,
**3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.**

## வருடச் சந்தா ரூ. 8-00.

**ஸர்வஜித் மார்கழி 28உ (12—1—1948) முதல் தொடர்ந்து நடைபெறுகிறது.**